

# தடுமாறும்... இளமை



தமிழில்...

மௌலானா முஹம்மது அப்துற்றஹீம் ரஷாதி

சமூக சீர்திருத்த வரிசையில்.....
வெளியீடு எண்..10

# தடுமாறும் இளமை...

தொகுப்பு :
**மௌலானா பீர் ஜுல்ஃபிகார் அஹ்மத் நக்ஷபந்தீ**

தமிழில் :
**மௌலானா முஹம்மது அப்துற்றஹீம் ரஷாதி**

—— வெளியீடு ——
**முஸ்லிம் சமூக சீர்திருத்தப் பேரவை**
ஜாமிஆ அல் உல்வத்துல் ஹசனா ஷரீஅத் கல்லூரி
பள்ளபட்டி - 639207
தொடர்புக்கு : 04320 240888-240033-241133.

## நூலாசிரியரைப் பற்றி...

பாகிஸ்தானின் தலை சிறந்த மார்க்க அறிஞரும், ஆன்மீகப் பெரியாரும், உலகறிந்த சீர்திருத்த ஞானியுமான... ஹஜ்ரத் மௌலானா பீர்ஜுல்ஃபிகார் அஹ்மத் நக்ஷபந்தீ தாமத் பரகாதுஹும் அவர்கள்.... தென் ஆப்பிரிக்காவில் இளைய சமுதாயத்தின் முன் பிரத்யேகமாக நிகழ்த்திய பேருரையின் தமிழாக்கம் தான் இச்சிறுநூல். இன்றும்.... சீர்திருத்த நோக்கத்திற்காக உலகமெங்கும் பயனித்து மனித சேவையாற்றி வரும் மகான் அவர்கள் முன்னாள் பொறியியல் பட்டதாரி அறிஞர் என்பது குறிப்பிடத்தக்கது. அவர்களின் சீர்திருத்த உரைகளும், பொன்மொழிகளும், கருத்துக்களும் நூற்களாக, குறுந்தகடுகளாக டஜன் கணக்கில் வெளி வந்து உலகளாவிய அங்கீகாரம் பெற்றுள்ளன.

நூலின் பெயர் : தடுமாறும் இளமை. ♦ ஆசிரியர் : மௌலானா பீர் ஜுல்ஃபிகார் அஹ்மத் நக்ஷபந்தீ ♦ பதிப்பு ஆண்டு : 2009 ♦ வெளியீடு : முஸ்லிம் சமூக சீர் திருத்தப் பேரவை ஜாமிஆ அல் உஸ்வத்துல் ஹசனா ஷரீ அத் கல்லூரி, பள்ளப்பட்டி - 639207. ♦ அச்சாக்கம்;நியூஸ் மேன் பப்ளிகேஷன்ஸ், மூன்றாவது தளம் கீழவெளிவீதி மதுரை-625001. தொலைபேசி : 9843023853.
Email:newsmanpublication@ymail.com

“ தம்பீ உன் இளமை களங்கமடையாதிருக்க.....

இறை அருள் புரிய வேண்டுமே!”

**மனித வாழ்வின் கட்டங்கள்!**

மனித வாழ்வின் பல கால கட்டங்கள் உள்ளன. குழந்தை பிறக்கும் போது அது பாலகப் பருவம் எனப்படுகிறது. அதில் குழந்தையின் வேலை பால் அருந்துவதும், நேரம் கழிப்பதும் தான். இன்னும் சற்று வளர்ந்ததும் நடந்து திரியவும் ஓடியாடவும் செய்யத்தகுதி பெற்று விடுகிறது. பிறகு விளையாடுவதில் தான் அதன் ஆர்வம் இருக்கும். உண்ணும், பருகும், உறங்கும், மீதிநேரம் முழுவதும் விளையாடும். பிறகு சிறு பிராய காலம் ஆரம்பமாகிவிடுகிறது. இச்சிறுபிராயத்தில் அவன் மீது சின்னஞ்சிறு பொறுப்புகள் போடப்படுகிறது. பிறகு கல்வி புகட்ட ஆரம்பிக்கப்படுகிறது. பொதுவாக ஆறுவயதில்..... குழந்தைக்கு, குர்ஆன், இன்னும் இதர கல்வி கற்பிக்க துவக்கமிடப்படுகிறது. இன்னும் சற்று வளர்ந்துவிட்டால் வளர வளர கல்வியின் சுமை அதிகமாகிக் கொண்டே செல்கிறது. வாலிப வயதில் காலெடுத்து வைக்கும்போது அவனது கல்விச் சுமையும் பெருமளவில் கூடிவிடுகிறது. அவனது வாழ்க்கையின் தேவைகளும் மாறிவிடுகின்றன. இப்போது தன் பெற்றோருக்கு ஆலோசனை வழங்குபவனாகவும் ஆகிவிடுகின்றான். முதலில் அவர்களின் பேச்சை மட்டும் செவியுற்று வந்தான். இப்போது மூன்று விஷயங்கள் செவியுற்றால் ஒன்றிற்கு ஆலோசனையும் கொடுக்கிறான். ஏனெனில் கல்வி கற்பதில் ஈடுபட்டிருப்பதால் வயது கூட கூட முதிர்ச்சி ஏற்பட்டுக்கொண்டே இருக்கிறது. பிறகு கல்வியைப் பூர்த்தி செய்த பின் ஏதேனும் செயல்களத்தை அவனுக்காக பெற்றோர் தேடிக் கொடுக்கின்றனர். இவன் அதில் வேலை செய்ய ஆரம்பித்து விடுகிறான். நல்ல பணி செய்யும் போது வருமானமும் கிடைக்க ஆரம்பிக்கிறது. இப்போது பெற்றோர் அவனுக்கு வாழ்க்கைத்துணை தேவை என்பதை உணர்கின்றனர். மணமுடித்து வைக்கின்றனர். இது வாழ்வின் ஒரு கட்டம். இதில் மனிதன் தன் மனைவியுடன் இணைந்து தனது இல்லறத்தினை அடித்தளமிடுகிறான். ஒரு புதிய குடும்பத்தின் அமைப்பு ஏற்படுகிறது. பொறுப்புகளை எடுக்கிறான். அல்லாஹ்வின் கடமைகள், அடியார்களின் கடமைகள் இரண்டையும் நிறைவேற்றுகிறான்.

**பயன்மிக்க மனிதன் யார்?**

எனினும் இந்த வாலிப வயதில் மனிதனுக்கு நேரமோ அதிகமுள்ளது. ஆனால் வேலையோ சிறிதளவுதான் செய்கிறான். அதுவும் வேலைசெய்ய நினைப்பவர்கள் தான் அதையும் செய்கின்றனர். இல்லையெனில், வேலைசெய்ய

நினைக்காதவர்களுக்கோ, நேரமில்லை என்ற புலம்பல் தான் எப்போதும் இருக்கும். இதனால் தான் 'ஏதேனும் ஒரு வேலையைப் பொறுப்பு கொடுப்பதானால் வேலையில்லாமல் வீணாக இருப்பவர்களுக்கு கொடுக்காதீர்கள், ஏதேனும் வேலையில் ஈடுபட்டிருப்பவனுக்குக் கொடுங்கள்' என்று சொல்லப்படுகிறது. வேலை செய்பவன் தன் வேலையுடன் இதையும் செய்து விடுவான். வேலை செய்யாமலிருப்பவனின் பொறுப்பில் வேலை ஏன் கொடுக்கக் கூடாது எனில் அவனிடம் நேரமே இல்லை. எனவே சோம்பேறியின் அடையாளம் யாதெனில், அவனிடம் ஏதேனும் வேலை சொல்லப்பட்டால், என்னிடம் ஓய்வு நேரம் இல்லை என்று சொல்லிவிடுவான். வேலை செய்பவர்களாக இருந்தால் நாம் செய்யும் வேலை கொஞ்சம் தான் இன்னும் நாம் வேலை செய்ய முடியும் என்று நினைப்பார்கள். இது தான் வாழ்க்கையின் அசல் கால கட்டம், உடல் ஆற்றலும்,நினைவாற்றலும் ஏராளமாக உள்ளன. உடல்வலிமை உச்சகட்டத்தில் உள்ளது. என்ண ஆற்றல்கள் எல்லையை தொட்டுக் கொண்டுள்ளன. இந்த வயதில் மனிதனின் முன் ஏதேனும் நோக்கம் இருந்தால் அதை அடைவதற்கு பெரும் பணியாற்ற முடியும்.

**இப்ராஹீம் (அலை) அவர்களும், நம்ரூத் அரசனும்**

நீங்கள் சிந்தித்துப்பார்த்தால்... வரலாற்றைப் புரட்டிப்பார்த்தால், உலகில் எத்தனையெல்லாம் பெரிய சாதனைகள் நிகழ்ந்துள்ளனவோ, பெரும்பான்மையானவை வாலிபர்கள் ஆற்றியவைதான். உதாரணமாக அபுல் அன்பியா எனப்படும் சய்யிதுனா இப்ராஹீம்(அலை)அவர்களை நபிமார்களின் பாட்டனார் என்று சொல்லலாம். அவர்களின் வமிசாவழியில் பத்தாயிரத்திற்கும் அதிகமான நபிமார்களை அல்லாஹ் அனுப்பினான். அந்த இப்ராஹீம் (அலை) அவர்கள் தம் வாலிப வயதில் ஏகத்துவத் தூதை எடுத்துக் கொண்டு எழுந்தார்கள், இணை வைத்தல், சிலை வணக்கத்தை எதிர்த்துப் போராடினார்கள்.அவர்களுடைய காலத்தில் நம்ரூத் என்ற அரசன் தன்னையே இறைவன் என்று தாவாச் செய்து கொண்டிருந்தான். இப்ராஹீம் (அலை) அவர்கள் அவனின் முன் நின்று, நீயும், நீ சொல்வதும் தவறு என்று அழுத்தமாகக் கூறினார்கள். அவனோடு பேச வேண்டியதேற்பட்டது. 'உமது இறைவன் யார்? என்ன செய்கின்றான்? என்று சொல்!' என்றான். 'படைப்பினங்களை உயிர்ப்பிப்பவனும் மரணிக்கச் செய்பவனும் தான் என் இறைவன்!' என்றார்கள். நம்ரூத் யோசித்துவிட்டு, இந்த வேலையை நானும் கூட செய்வேன் என்றான். சிறையிலிருக்கும் மரணகைதியை அழைத்து வந்து விடுதலை செய்துவிட்டு, 'பார்! மரணிக்க இருந்தவனுக்கு நான்

உயிர் கொடுத்துவிட்டேன்!' பிறகு குற்றமற்ற ஒருவனை அழைத்து வந்து தூக்கிலிட்டுக் கொன்றுவிட்டு 'இதோ! இவனை மரணிக்கச் செய்துவிட்டேன்' என்றான்.

நபி இப்ராஹீம் (அலை) அவர்கள், இவனிடம் அறிவே இல்லை அல்லது அதை முற்றிலும் உபயோகிக்க முற்படவில்லை என்று விளங்கிக்கொண்டபின் வேறுவிதமாக அவனுக்குப் புரியவைக்க முனைந்தார்கள். "எனது இறைவன் சூரியனை கிழக்கிலிருந்து உதிக்கச் செய்து மேற்கில் மறையச் செய்கின்றான். எங்கே! நீ மேற்கிலிருந்து உதிக்கச் செய் பார்க்கலாம்!" என்றார்கள். இதைக் கேட்டு பதிலுரைக்க முடியாமல் வாயடைப்பட்டவனாகி விட்டான். ஒட்டு மொத்த சமுதாயமும் சிலை வணக்கத்தில் சிக்கியிருந்தது. ஒரு தருணத்தில் மக்கள் திருவிழாவிற்குச் செல்ல வேண்டியிருந்தது. இப்ராஹீம் (அலை) எனக்கு உடல்நிலை சரியில்லை என்று கூறி ஒதுங்கிக் கொண்டார்கள். அவர்கள் சென்றதும் அங்கிருந்த சிலைகளையெல்லாம் உடைத்துவிட்டு கோடாரியை ஒரு பெரிய சிலையின் கழுத்தில் மாட்டி வைத்துவிட்டார்கள். திரும்பிவந்த மக்கள் சிலைகளின் இந்த நிலைகண்டு சினம் கொண்டெழுந்தார்கள்". "இந்த வேலையை யார் செய்திருக்க முடியும்?" என்று யோசிக்கலானார்கள். "இப்ராஹீம் என்னும் வாலிபர் பற்றி நாம் கேள்வியுற்றோம்" என்று அவர்கள் கூறியதை குர்ஆன் சான்றாகக் கூறியுள்ளது. "வாலிபர்" என்று கூறப்பட்டுள்ளது கவனிக்கத்தக்கது. இப்ராஹீம் என்ற வாலிபர்தான் நம் சிலைகளைப் பற்றி விமர்சித்துக் கொண்டிருந்தவர். எனவே இப்ராஹீம்(அலை) அவர்கள் அழைத்துவரப்பட்டு விசாரிக்கப்பட்டார்கள்". "எந்தச் சிலையின் மீது கோடாரி உள்ளதோ அந்தச் சிலையிடமே கேளுங்கள்!" என்றார்கள் நபிஇப்ராஹீம் (அலை) "இது பதில் சொல்ல இயலாதே!" என்றார்கள் மக்கள். "தன்னைத்தானே அழிவிலிருந்து காப்பாற்றிக் கொள்ள முடியாத சிலைகள் உங்களை எப்படி காப்பாற்ற முடியும்?" என்றார்கள் இப்ராஹீம் (அலை) "சரி,சரி! அனைவரும் சேர்ந்து தெய்வங்களுக்கு உதவி செய்யுங்கள்!" என்றனர் எல்லோரும் ஒன்றுபட்டு ஒரேவிதமாக யோசித்தார்கள். "சரி! இவரை நெருப்பிலிட்டு பொசுக்கி விடுங்கள்" என்று முடிவு செய்தனர்.

இதன் மூலம், இப்ராஹீம்(அலை) நெருப்பிலிடப்பட்ட போது அவரது வயது வாலிப வயது என்பது தெரிகிறது. குர்ஆன் அவரை "வாலிபர்" என்று குறிப்பிட்டுள்ளது. உலகில் சத்தியத்தின் குரல் உயர்த்தியவர்கள், தம் காலத்தின் நம்ரூத்களை பதில் கூற முடியாமல் வாயடைக்கச் செய்தவர்கள். சோதனையின் நெருப்பில் எரிய நேரிட்டவர்கள் யாராக இருந்தார்கள்? வாலிபர்தான் என்பது இதன் மூலம் தெரிகிறது.

**மூஸா (அலை) அவர்களும், ஃபிர்அவ்னும்**

சய்யிதுனா மூஸா (அலை) அவர்களை நபியாக நியமித்து அல்லாஹ் ஃபிர்அவனிடம் அனுப்பிவைத்தான். "ஃபிர்அவ்னிடம் செல்லுங்கள்! அவன் பெரிதும் அடாவடித்தனம் செய்கின்றான்", என்று அல்லாஹ் கூறினான். அது போது அவர்களின் வயது என்னவாக இருந்தது? ஒரு நாள் மூஸா(அலை) வழியில் சென்று கொண்டிருந்தபோது இரண்டு பேர் சண்டை போட்டுக் கொண்டிருந்தனர். ஒருவர் தன் சமூகத்தை சேர்ந்தவர், இன்னொருவர் அந்நியர். அவர்களை சண்டையிலிருந்து விலக்குவதற்காக அவர்களில் ஒருவனைக் குத்தினார்கள். குத்திய வேகத்தில் விழுந்தவன் செத்துவிட்டான். வயோதிகத்தில் இவ்வளவு வலிமை இருக்க முடியுமா? ஒரே குத்தில் ஒரேடியாக டெக்னிக்கல் நாக்அவுட் செய்துவிட்டார்களே! இல்லை...! இது வாலிப வயதாக இருந்தது. நிறைந்த வாலிப முறுக்கு! ஆக நபி மூஸா (அலை) அவர்கள் ஃபிர்அவனின் முன் சென்று நின்ற போது அவருக்கும் வாலிப வயதாகவே இருந்தது...

**குகைவாசிகள்**

குர்ஆனில் குகைவாசிகளின் சம்பவம் இருக்கிறது. இந்த குகைவாசிகள் யார்? அக்கால மன்னன் பெரும் அநியாயக்காரனாக இருந்தான். சூழ்நிலை மிக மோசமாகவும் சாதகமற்றும் இருந்தது. இவர்கள் சில வாலிபர்கள். தமது ஈமானிற்கு ஆபத்தை உணர்ந்தார்கள். நாம் இந்த இடத்தைவிட்டும் தூரமாகச் சென்றுவிடலாம் என்று யோசித்தார்கள். குர்ஆன் சாட்சியம் வகிக்கிறது. "இவர்கள் தம் இரட்சகனின் மீது ஈமான் கொண்டவர்கள், நாம் அவர்களுக்கு நேர்வழியை மேலும் அதிகப்படுத்தினோம்"(அல்-கஹ்ஃபு:13) ஸய்யிதுனா இப்ராஹீம் (அலை) அவர்கள் வாலிபர் ஸய்யிதுனா மூஸா (அலை) வாலிபர். குகைவாசிகளும் வாலிபர்கள். இன்னும் ஸய்யிதுனா ஈஸா(அலை) அவர்களும் வாலிபர். அவர்கள் பூமியிலிருந்து வானிற்கு உயர்த்தப்பட்ட போது அவர்களுக்கு நிறைந்த வாலிப வயது....

பிறகு நபி முஹம்மது (ஸல்) அவர்கள் உலகிற்கு வந்து நபித்துவ பிரகடனம் செய்த போது அவர்களின் புனித வயது நாற்பது. நிறைவான வாலிப வயது. ஹஜ்ரத் அபூபக்ர் சித்தீக் (ரலி) அவர்களின் வயது முப்பத்தி எட்டு. ஹஜ்ரத் உமர்(ரலி) அவர்களின் வயது முப்பத்தி ஏழு. ஹஜ்ரத் அலி (ரலி) அவர்களின் வயது பத்து. ஹம்ஜா (ரலி) அவர்களும் வாலிபர். ஹஜ்ரத் உஸ்மான் கனி(ரலி) அவர்களும் வாலிபர்தான். இவர்கள் எல்லாம் வாலிபர்களின் ஒரு ஜமாஅத்து. அல்லாஹ் அவர்களை எழ வைத்துவிட்டான். அவர்கள் உலகமெல்லாம் புரட்சி படைத்துவிட்டார்கள். இந்த உதாரணங்களின்

மூலம், உலகில் யாரெல்லாம் பெரிய சாதனை படைத்துக் காட்டினார்களோ அவர்கள் வாலிபர்களாக இருந்தார்கள் என்று தெரிகிறது. ஆகவே இந்த வயதில் அல்லாஹ் பரக்கத்தை வைத்துள்ளான். அல்லாஹ் கொடுக்கப்பட்ட அருட்கொடைகளும் ஆற்றல்களும் பூர்த்தியான நிலையை அடைந்துள்ளன. எனவே இந்த வயதில் மனிதன் எந்த வேலையைச் செய்ய நாடுகிறானோ, அதை சாதித்துவிடுகிறான். இது ஒரு சிறந்த வயது. மறுமையின் அறுவடைக்காக விதைபோடுவதற்கு மார்க்கப்பணியை தன் வேலையாக ஆக்கிக் கொள்வதற்கு சிறந்த காலம்....!

**பெரியவர்களை மதிக்க வேண்டும்**

ஆகவே நம் பெரியவர்கள் சொன்னார்கள்: "வயோதிகர்களிடம், வாழ்க்கையின் அனுபவங்கள் உள்ளன". அவர்கள் வாழ்க்கையில் அடிபட்டு, எது செய்ய வேண்டும்? எது செய்யக்கூடாது? என்று புரிந்து கொண்டவர்கள். வாழ்க்கையில் இரண்டு விதமான வேலைகள் உள்ளன. ஒன்று, என்னவெல்லாம் செய்யலாம்? என்பவை. இன்னொன்று என்னவெல்லாம் செய்யக்கூடாதவை? என்பன. இந்த இரண்டாவது முதலாவதைவிட மிக முக்கியமானது. ஏனெனில், அடிபடாமல் அடியான் புரிந்து கொள்ளமுடியாது. வாழ்க்கையில் தடுக்கி விழுந்து அடிபட்டவர்கள் தான் மேடு பள்ளத்தைப் பார்க்க முடியும். சூடு குளிரைக் காண முடியும். எல்லாவித நிலைகளையும் அனுபவித்திருக்க முடியும். பெரியவர்களுக்கு இதுவெல்லாம் முன்பிருந்தே தெரிந்திருக்கும். எனவே முதியவர்கள் உண்மையாக இஸ்லாமிய பார்வையில் (THINK TANK) புத்திசாலிகளாக உள்ளனர். ஒவ்வொரு வீட்டிலும் பெற்றோரின் தகுதி - "திங்க்டேங்க்" - ஆகும். வாலிபர்கள் அவர்களிடமிருந்து வழிகாட்டுதல் பெற வேண்டும். பாலிஸி கற்றுக்கொள்ள வேண்டும். பிறகு வேலை செய்துகொண்டே செல்லலாம். உழைப்பது வாலிபர்களின் வேலை அவர்களுக்கு வழிகாட்டுதல் செய்ய வேண்டியது பெரியவர்களின் பணி. இதனால் தான் "பரகத் என்பது உங்களின் பெரியவர்களுடன் இருக்கிறது" என்று நபி(ஸல்) திருவாய் மலர்ந்தார்கள்.

**ஓர் உயர்ந்த உதாரணம்**

தண்ணீர் என்பது வேறு, தீ என்பது வேறு. ஆனால் இரண்டும் சேர்ந்தால் நீராவியாகிவிடுகிறது. இந்த (STEAM) நீராவி பெரும் பெரும் ரயில் வண்டிகளின் சுமைகளை இழுத்துச் செல்கிறது. இவ்வாறே வாலிபர்களின் உதாரணம் தீ போன்றது. பெரியவர்களுக்கு உதாரணம் தண்ணீர். ஆகவே, வாலிபர்களின் உற்சாகம், பெரியவர்களின் விவேகம், இந்த இரண்டும் இணைந்துவிட்டால் இதுவும் நீராவியைப் போன்ற ஒன்றாக உருவாகிறது. அது வாழ்க்கை

எனும் வண்டியைத் தள்ளிக் கொண்டு போய் இலக்கில் கொண்டு சேர்க்கிறது. வாலிபர்கள் தம்மிடையே ஒருவருக்கொருவர் வழிகாட்டியாகிவிடும் போது தடுக்கி விழ வேண்டிய தேற்படுகிறது."A YOUNG LEADING THE YOUNG IS LIKE A BLIND LEADING THE BLIND, THEY WILL BOTH FALL IN TO THE DITCH" - ஒரு வாலிபர் இன்னொரு வாலிபருக்கு வழிகாட்டுவது என்பது ஒரு குருடன் மற்றொரு குருடனுக்கு வழிகாட்டுவதைப் போன்றதாகும்...." ஏனெனில் அவர்கள் வாழ்க்கைப் பாதையைப் பார்த்ததில்லை. "A REAL GUIDE IS HE WHO HAS GONE ROADS WHICH YOU WANT TO GO" - உண்மையில் வழிகாட்டி என்பவர், நீங்கள் எந்தப்பாதையிலெல்லாம் செல்ல நினைக்கிறீர்களோ, அந்தப் பாதைகள் அனைத்திலும் நடந்து பார்த்தவர்தான் உண்மையான வழிகாட்டி".

ஒருவருக்கு பாதையே தெரியாவிடில் அவர் எப்படி வழிகாட்டுவார்? அவர் தடுக்கி விழத்தான் செய்வார்! பாதையில் எங்கெல்லாம் வேகத்தடைகள் உள்ளன என்பது அவருக்கு எப்படித் தெரியும்? எனவே, வெற்றிகரமான வாழ்க்கை என்பது தன் வாலிப வயதில் தன் பெரியவர்களின் வழிகாட்டுதலின் படி நடப்பவருக்குத் தான் கிடைக்கும். எனவே இந்த சமுதாயத்தின் எத்தனை பிரபலமானவர்கள் இருந்திருக்கிறார்களோ, அவர்களெல்லாம் தம் பெற்றோர்களின் தர்பிய்யத் - வழிகாட்டுதல் பெற்றவர்கள் தான். மேலும் அவர்கள் தம் வாலிப வயதிலேயே மிக உயர்ந்த தகுதிகளைப் பெற்றுக் கொண்டார்கள்.

**உயர்ந்த பண்புள்ள வாலிபர்கள்:**

பாயஜீத் பிஸ்தாமீ (ரஹ்) அவர்களைப் பற்றி ஜுனைத் பக்தாதி (ரஹ்) கூறிக் கொண்டிருந்ததாவது : "மலக்குகளிடையே ஜிப்ரயீல் (அலை) அவர்களின் தகுதியைப் போன்றதுதான், வலிமார்களின் உலகில் பாயஜீத் பிஸ்தாமீ (ரஹ்) அவர்களுடைய தகுதி". அவர்கள் இளமையிலேயே அநாதையாகிவிட்டார்கள். மேலும் நினைவில் வையுங்கள் : இந்த உலகில் "யதீம்" - அநாதைகள் தான் "துர்ரெயதீம்" "நிகரற்ற முத்தாக" ஆகின்றனர். வெளிப்படையான ஆதரவு இல்லாத போது அல்லாஹ் அவர்களின் ஆதரவாகிவிடுகின்றான். தாய் தர்பிய்யத் செய்தார்கள். இந்தக் குழந்தை, குழந்தைப் பருவத்திலிருந்தே பாக்கியம் பெற்ற குழந்தையாக ஆனது. சரியான வாலிபப் பருவத்தில் இவர்கள் ஆலிமாகவும் இறை நேசராகவும் தன் காலத்தின் மிகப்பெரிய ஷைகாகவும் திகழ்ந்தார்கள்.

(2) அபூ ஹாமித் முஹம்மது கஜ்ஜாலி(ரஹ்) அவர்களும் தம் இளமையிலேயே அநாதையாகிவிட்டார்கள். அவர்களை அவர்களின் அன்னைதான் தர்பிய்யத் செய்து உருவாக்கினார்கள். இரண்டு

சகோதரர்கள் பெரியவர் அஹ்மது கஜ்ஜாலி, சிறியவர் முஹம்மது கஜ்ஜாலி. இவரைத்தான் இமாம் கஜ்ஜாலி என்று கூறப்படுகிறது. இந்த இமாம் கஜ்ஜாலி தன் காலத்தின் கத்தீபாக தலைமை முஃப்தியாகவெல்லாம் ஆகிவிட்டார்கள். அவரது மூத்த சகோதரர் நல்லவராகவும் ஆன்மீக வலிமை பெற்றவராகவும் இருந்தார்கள். எனினும் அவர்கள் தமது தம்பி இமாம் கஜ்ஜாலி அவர்களின் பின்னால் தொழ சம்மதிக்காமல் இருந்தார்கள். ஒருநாள் இமாம் அவர்கள் தம் அன்னையாரிடம். "அம்மா! மக்களெல்லாம் என்ன உனது சகோதரர் உமக்குப்பின்னால் நின்று ஜமாஅத்துடன் தொழுவதில்லையே! என்று முறையிடுகிறார்கள்" என்று கூறினார். அன்னையவர்கள் மகனை அழைத்து. "மகனே! தனியாக தொழுவதை விட மஸ்ஜிதுக்கு சென்று ஜமாஅத்துடன் தொழுதுவரவும்!" என்று கூறினார்கள். அதன் படி அடுத்த தொழுகைக்கு மூத்தவர் பள்ளிக்குச் சென்று ஜமாஅத் தொழுகையில் கலந்து கொண்டார். ஒரு ரக்அத் முடிந்து இரண்டாம் ரக்அத் ஆரம்பமானதும் தொழுகையை முறித்துக் கொண்டு வீட்டிற்கு வந்துவிட்டார்.

அன்னை அவரை அழைத்து. " மகனே! ஏன் இப்படிச் செய்தாய்?" என்று விசாரித்தார்கள்". அம்மா! தம்பிக்குப்பின்னால் ஜமாஅத்துடன் தொழச் சொன்னீர்கள். அவர் தொழுகையில் இருந்தவரை அவருக்குப்பின்னால் நின்றிருந்தேன். பிறகு அவர் தொழுகையில் இல்லாதபோது நான் ஏன் அவர் பின்னால் நின்று தொழவேண்டும்?" என்றார். அன்னை தம்பியை அழைத்து நடந்தது என்ன? என்று கேட்டார்கள். வெட்கத்தில் அவரது தலை தாழ்ந்துவிட்டது. "அம்மா! அண்ணன் சொல்வது சரி! முதல் ரக்அத்தில் நான் அல்லாஹ்வின் பக்கம் முழு கவனம் செலுத்தியிருந்தேன். இரண்டாவது ரக்அத்திற்கு எழுந்த போது. தொழுகைக்குப்பின் பாடம் நடத்த வேண்டியிருந்தது. அதில் ஃபிக்ஹு சட்டங்கள் போதிக்க வேண்டியிருந்தது. தொழுகையில் ஒரு சட்டத்தின் பால் கவனம் சென்றுவிட்டது. அதனால் என் கவனம் தொழுகையில் இல்லாமலாகிவிட்டது என்றார்" அப்போது மூத்தவர், "இவர் தொழுகையிலேயே இல்லாதபோது நான் தொழுகையை முறித்துக் கொண்டு வீட்டிற்கு வந்துவிட்டேன்" என்றார். அதைக்கேட்ட அன்னை பெருமூச்சு விட்டவர்களாக சொன்னார்கள். "கைசேதம்! எனக்கு இரு மகன்கள் இருந்து இருவருமே நான் நினைத்தபடி உருவாகவில்லையே?" இதைக்கேட்ட இருவரும். "அம்மா! அது எப்படி?" என்று வினவினர். "இளையவர் தொழுகையில் முன்னால் இமாமாக நின்றுகொண்டு பெண்களின் ஹைலு, நிஃபாஸ் உடைய சட்டங்கள் பற்றி சிந்தித்துக் கொண்டிருந்தார். அவருக்குப்பின்னால்

நின்ற மூத்தவர் தன் தம்பியின் மன நிலையைப்பற்றி சிந்தித்துக் கொண்டிருந்தார். இருவரும் அல்லாஹ்வின் பால் கவனம், சிந்தனை செலுத்தவில்லை" என்றார் அன்னை. காலத்தின் ஷைகுமார்கள் தீர்த்துவைக்கும் தஸவ்வுஃபுடைய நுட்பமான மஸாயில்களை அக்காலத்தின் தாய்மார்கள் தீர்த்து வைப்பவர்களாக இருந்துள்ளார்கள். எனவே இமாம் கஜ்ஜாலி அவர்களும் இளம் வயதிலேயே இமாம் கஜ்ஜாலியாக இருந்துள்ளார்கள்.

(3) ஷைக் அப்துல் காதிர் ஜீலானீ(ரஹ்) சரியான வாலிப வயதில் காலத்தின் பெரிய ஷைகாக ஆகிவிட்டிருந்தார்கள்.

(4) ஹஜ்ரத் காஜா முயீனுத்தீன் சிஷ்தி அஜ்மீரி (ரஹ்) அவர்களும் தம் வாலிப வயதில் தம் காலத்தின் பெரிய ஷைகாக உருவாகியிருந்தார்கள்.

(5) ஹஜ்ரத் காஜா குத்புத்தீன் பக்தியார்காகீ(ரஹ்) அவர்களும் தம் இளம் வயதில் அக்கால மன்னர்களின் குருநாதராக தயாராகியிருந்தார்கள்.இவர்களெல்லாம் தம் பெற்றோர்களின் நல்ல தர்பிய்யத்தைப் பெற்றிருந்தார்கள். பிறகு வாலிப வயதில் ஹிதாயத்தின் விண்மீன்களாக ஆகிப் பிரகாசித்தார்கள். இன்றும் நாம் அவர்களின் பெயரைக்கூறும் போது நம் உள்ளத்தில் அவர்களின் பெருமையும், மதிப்பும் அலைமோதுகிறது.

**இளம் வயதினரின் பெரும் பணிகள் :**

திரு நபி (ஸல்) அவர்கள் தம் மரணத்திற்கு சற்று முன்பு அனுப்பி வைத்த படைக்கு உஸாமத்திப்னு ஜைது(ரலி) அவர்களைத் தளபதியாக நியமித்தார்கள். அந்நேரம் அவரது வயது பதினெட்டுதான். பதினெட்டு வயதில் தளபதியாக பொறுப்பு வகித்தார்கள் என்றால் பார்த்துக் கொள்ளுங்கள். முஹம்மதுப்னு காஸிம், ஒரு பெரும் நிலப்பரப்பை வெற்றி கொண்டு அங்கு இஸ்லாம் பரவ பாடுபட்டார்கள். அவர்கள் தளபதியாக பொறுப்பேற்ற போது வயது என்ன தெரியுமா? பதினெழு வயதுதான். இன்று பதினெழு வயது வாலிபர் வீட்டுப்பொறுப்பைக்கூட சமாளிக்க முடியாது. ஆனால் அன்று பதினேழு வயது வாலிபர் முழு படைப்பொறுப்பை சமாளித்தார். மேலும் நூற்றுக்கணக்கான மைல்கள் வரை இஸ்லாம் பரப்பும் பணி செய்தார். இந்த ஆற்றல் அவருள் எப்படி வந்தது? அவர் பெரியவர்களின் வழிகாட்டுதலிற்கேற்ப வாழ்க்கை நடத்தினார். குறைந்த நேரத்தில் நிறைந்த பணி ஆற்றிமுடித்தார்.

ஷாஃபியீ (ரஹ்) பதிமூன்று வயதில் இமாம் ஷாஃபியீ ஆகிவிட்டார்கள். குர்ஆன் விரிவுரை நடத்த உட்கார்ந்தார்கள். அதற்குள் இரண்டு சிட்டுக்குருவிகள் சண்டை போட்டுக்கொண்டு அவர்கள் முன்வந்து விழுந்தன. விரிவுரையாளரான இமாம் அவர்கள் தமது

தலைப்பாகையைக் கழற்றி குருவிகளின் மீது வைத்துவிட்டார்கள். அங்கிருந்த முடி நரைத்த வயோதிகர்கள் "இது கௌரவத்திற்கு இழிவானது" என்று தவறாகக் கருதினார்கள். எனினும் இமாம் அவர்கள் தம் பாடத்தை துவங்கிவிட்டார்கள். மேலும் அதில் "சிறுவன் நபியின் மகனாக இருந்தாலும் சிறுவன்தான்" என்ற ஹதீஸைக் குறிப்பிட்டார்கள். ஆக, இந்த இளம் வயதில் குர்ஆன் விரிவுரை நிகழ்த்தினார்கள் அல்லவா?

ஹஜ்ரத் காஜா முஹம்மது மஃஸூம் அவர்கள் இமாமெ ரப்பானீ முஜத்தித் அல்ஃபெஸானீ அவர்களின் மைந்தர். அவர் தம் பன்னிரண்டாம் வயதில் தம் தகப்பனாரிடமிருந்து நக்ஷபந்தியா சில்சிலாவின் பிரதிநிதித்துவம் - கிலாஃபத் - பெற்றுக் கொள்ளத் தகுதியாகிவிட்டார்கள். எனவே, வேலை செய்யநினைப்பவர்கள் பனிரெண்டு வயதில், பதிமூன்று வயதில், பதினெழு, பதினெட்டு வயதினில் இவ்வளவு பெரிய பணிகளைச் செய்துவிடுகிறார்கள். எனவே இந்த வயது மிகவும் பயனுள்ள காலகட்டம். பாவம்! சின்னப்பையன் என்று நாம் நினைக்கிறோம். இல்லை! அவனுக்கு பெரும் பண்புகளை ஆற்றல்களை அல்லாஹ் வழங்கி வைத்துள்ளான். ஆகவே, சரியான முறையில் ஆரம்பத்திலிருந்து அவனுக்கு தர்பிய்யத் கொடுக்கப்பட்டிருந்தால், பதினைந்து - பதினெட்டு வயதில் சமுதாயத்தின் நிறைவான ஒரு நபராக ஆகியிருப்பார். எனினும், இளமையிலிருந்து தர்பிய்யத் பெற்றவர்தான் இதில் தயாராகின்றார். குழந்தைகள் பெற்றோர்களின் பேச்சை கேட்கவே செய்யாதவர்களாயின், பெற்றோர்கள் சிறிது புரிய வைக்கமுயன்றால் அதைத்தவறாக எடுத்துக் கொள்வார்களாயின் பிறகு இந்த வயதில் இவ்வாறெல்லாம் ஆக முடியாது. பிறகு ஒரு கட்டத்தில் தடுக்கி விழுந்து தட்டுத்தடுமாறி பிறகு புரிய ஆரம்பிக்கிறான். மேலும் இவர்கள் எனக்கு எவ்வளவோ புரிய வைக்க நினைத்தார்கள். எனினும் எனது துரதிருஷ்டம் நான்தான் இந்நிலைக்கு ஆளாகிவிட்டேன். அந்தோ! அவர்களின் பேச்சைக் கேட்டிருந்தால் எனக்கு இந்த பரிதாப நிலை ஏற்பட்டிருக்காது என்று சொல்லவும் செய்வான்.

**இச்சை விழிப்படையும் நேரம் ...**

ஆகவே வாலிப வயது எப்போதும் பெரிதும் உயர்ந்த காலகட்டம். எனினும் இன்னொரு சிக்கலும் உண்டு. அது யாதெனில், "TEENAGE" என்று ஆங்கிலத்தில் சொல்லப்படும் (13-19 வரையிலுள்ள) அந்த வாலிப வயதை அடைந்து விட்டால், குறிப்பாக 16,17,18 வயதில் வாலிபர்களில் இச்சை உணர்வும் விழிப்படைந்து வருகிறது. வாலிப முறுக்கேறுகின்றது. அது அவர்களுக்கு ஒரு புதுமையான உணர்வு. அதில் தம் பெரியவர்களின் ஆலோசனை வழிகாட்டுதல் பெறுவதற்கு

பதிலாக தம் நண்பர்களை ஆலோசகர்களாக ஆக்கிக்கொள்கிறார்கள். நண்பர்களோ ஒருவருக்கொருவர் தப்பும் தவறுமானவற்றைத்தான் கூறுகிறார்கள். ஆகவே. பெரும்பாலான இளைஞர்கள் இக்கட்டத்தை அடைந்து தடம்புரண்டுவிடுகிறார்கள். எதற்கு இன்னும் நேரம் வரவில்லையோ அதை அதன் நேரம் வருமுன் பரீட்சித்துப் பார்த்து விடத்துடிக்கிறார்கள். உதாரணமாக. "படிப்பைப் பூர்த்தியாக்கு! பிறகு உமக்கு கல்யாணம் செய்து வைக்கிறேன்". என்று பெற்றோர்கள் கூறுகிறார்கள். இது ஒரு ஒழுங்கு முறை. பள்ளி. கல்லூரிக்காலத்திலேயே இதுதேவையில்லை! பின்னால் வரும் கல்யாண நிலைகளை இப்போதே அனுபவித்துப்பார்க்க நினைக்கின்றார்கள். இது காயாவதற்கு முன்னால் பழுக்கும் முயற்சியைப் போன்றதாகும். ஒரு கனி அதன் உருவம் வளர்ந்து பெரிதாகி ஒரு கட்டத்தை அடைந்து பழுக்க ஆரம்பிக்கின்றது. இது இன்னும் முழுமையாக காயாகக்கூட ஆகவில்லை. அதற்கு முன்னால் பழுக்கவைக்க முயற்சிக்கின்றார்கள். இங்கு வந்துதான் தடுக்கி விழுகின்றார்கள்.

இதனால் தான் இன்றும் கூட எத்தனையோ இளைஞர்கள் இன்னும் பள்ளிப்பருவத்தில் தான் இருக்கிறார்கள். என்றாலும் அவர்கள் நண்பர்களின் வலையில் சிக்கிவிடுகிறார்கள். உடனிருப்பவர்கள் வழிகெடுத்து விடுகிறார்கள். சிலரை நண்பன் கெடுத்து விட்டான். சிலரை மாமன் கெடுத்துவிட்டான். சிலரை வகுப்பு ஆசிரியன் கெடுத்து விட்டான். இந்த வாலிபர்களுக்கு முதிர்ந்த மனோநிலை கிடையாது. எனவே எளிதில் மயங்கி விடுகின்றனர். தீய வழியில் சென்று விடுகிறார்கள். பெற்றோர்களோ மகன் ஏ கிரேடு பெறுவான். ஏ பிளஸ் கிரேடு அடைவான் என்றெல்லாம் கனவு கண்டு கொண்டுள்ளார்கள். ஆனால் பையனுக்கு படிப்பைத்தவிர உலகின் எல்லா வேலையும் நல்லதாகத் தெரிகிறது. குழந்தைகளிடம் கேட்டால் என்ன சொல்வார்கள்...?

**"புத்தகத்தை திறந்து அமர்ந்தால் என் கண்கள் குளமாகின்றன,**
**தாள் ஒவ்வொன்றிலும் உன் திருமுகம் தான் தெரிகின்றது-"**

என்பார்கள். பெற்றோர்கள். தம் பிள்ளைகள் உட்கார்ந்து படித்துக் கொண்டிருப்பதாக அக மகிழ்ந்து கொண்டிருப்பார்கள். எனினும் பையன் புத்தகத்தின் பக்கங்களில் யாரின் உருவத்தையோ உட்கார்ந்து பார்த்துக் கொண்டிருக்கிறான் எனில்... இந்நிலையில் பையன் ஏ கிரேடு எப்படி வர முடியும் ? இந்தப் பையன் தன் ஒழுக்க நிலையை எப்படி மேம்படுத்த முடியும்? முற்காலத்தில் என்ன நிகழ்ந்தாலும் எளிமையான வாழ்க்கைத் தரத்தில் தான் நிகழ்ந்தது. அக்காலத்தில் கெட்டுப்போனாலும் குறைந்த அளவே

கெட்டுப்போயினர்...

**மொபைல் போனின் நாசகாரம் :**

இன்றைய கால வசதிகள் கெட்டுப்போவதை இலகுவாக்கிவிட்டன. உதாரணமாக, மிகச்சிறிய ஒரு பொருள்தான். அதை செல்போன் என்று சொல்கிறோம். இது சிலருக்குத்தான் செல்போன். அதை நாம் ஹெல்போன் (HELL PHONE)என்று வைத்துள்ளோம். இளைஞர்களின் கரங்களில் இது அவர்களை நரகின் பால் இழுத்துச் செல்வதில் ஓடும் குதிரையின் வேலை செய்கிறது. இப்போது S.M.S.-ல் தூதுச் செய்திகள் வருகின்றன. இதில் மணிக்கணக்கில் நேரம் கழிகின்றது. லோக்கல் கால் ஃப்ரீ என்று சொல்லப்பட்டுவிட்டால் அங்கு மணிக்கணக்கில் செல்போனில் பேசப்படுகிறது. இளைஞர்கள் ஒன்று தமக்கிடையில் பேசிக் கொண்டிருப்பார்கள் அல்லது எங்காவது தவறான தொடர்பு கொள்ள முயற்சித்துக் கொண்டிருப்பார்கள். அப்படி எங்கேனும் தொடர்பு கிடைத்துவிட்டால், பாவங்களின் ஃபைல் திறந்துவிட்டது என்று வைத்துக் கொள்ள வேண்டும். இப்போது அவர்களுக்கு வேறு எந்த உணர்வும் இருக்காது. சூரியன் உதிப்பது பற்றியோ, மறைவது பற்றியோ, எந்த பிரக்ஞையும் இருக்காது.

முன்பெல்லாம் கூட செல்போன் சிணுங்கும் சப்தம் கேட்கும் விதமாக இருந்தது. இப்போதெல்லாம் அதன் தயாரிப்பாளர்கள் (Vibration) அசைவு, துடிப்பு நிலையை ஏற்படுத்தியுள்ளார்கள். இப்போது சபையில் உள்ளவர்களுக்குக் கூட ஒன்றும் தெரியாது. வைபரேட் ஏற்பட்டதும் அதன் இதயம் துடிக்க ஆரம்பிக்கிறது. இப்போது யாருக்கு என்ன தெரியப்போகிறது. மக்கள் தங்கள் வேலையில் ஈடுபட்டிருப்பார்கள். சாப்பிட்டுக் கொண்டிருப்பார்கள். அவனது பாக்கெட்டில் உள்ள அதன் இதயம் துடிக்க ஆரம்பித்ததும் இவன் எழுந்து பாத்ரூம் செல்லும் சாக்கில், அங்கே அமர்ந்து பேசுவதில் மூழ்கிவிடுகிறான். சிலவேளை எல்லோரும் தூங்கிய பின் தொடர்பு கொள்கின்றான். பையன் தன் அறையில் தூங்கிக் கொண்டிருப்பதாக பெற்றோர் எண்ணிக்கொள்கின்றனர். பையனோ தூங்குவதில்லை. பேச்சில் மெய் மறந்துள்ளான். இந்த போன் காரணமாக அவனது வாழ்க்கை பாழாகிக் கொண்டிருக்கிறது. முடிந்தவரை ஏதேனும் நிர்பந்தம் இருந்தாலே தவிர இளைஞர்களின் கையில் இந்த தொல்லை வராமலிருக்க முயற்சிக்க வேண்டும். நாம் பாசத்தில் நம் கைகளால் புதிய புதிய செட்டுகள் வாங்கிக்கொண்டு வந்து கொடுக்கிறோம். "மகனே! நான் உனக்காக துபாயிலிருந்து செட் வாங்கி வந்துள்ளேன் என்று ஆசைபடக்கூறுகிறோம். பெண் பிள்ளைகள் "அத்தா விடுமுறை விட்டதும் எதிர் பார்த்திருக்க வேண்டியிருக்கிறது. தேர்வு முடிந்துவிட்டது என்று உரிய நேரத்தில் உங்களுக்கு போன் மூலம் தகவல்

கொடுத்துவிடுவேன்" என்று சாக்கு சொல்லி அத்தாவை சமாதானபபடுத்துகின்றனர். எனினும் அசலில் தன் சுய நோக்கத்தை பூர்த்தி செயது கொள்ளவே செல்போன் தேவைப்படுகிறது.

**இன்டர்நெட்டின் அபாயம்...**

இன்னொரு தொல்லையும் வந்துவிட்டது. அதை மக்கள் இன்டர்நெட் என்கின்றனர். இந்த எளியவன் அதை ENTER IN TO NET என்கிறேன். "நெட்" என்றால் "வலை". "என்டர் இன்டு நெட்" என்றால் "வலையில் மாட்டிக்கொள்!" என்று சொல்லலாம் என்று தோன்றுகிறது. கண்ணியமான ஒருவர் இன்டர்நெட் முன் அமர்ந்து இன்டெர்நெட்டில் வேலை செய்து கொண்டிருக்கிறார். திடீரென்று திரையில் மிக ஆபாசமான விளம்பரங்கள் ஆரம்பித்துவிடுகின்றன. ஏனெனில், சமுதாயத்தில் ஆபாசத்தை - தீமைகளை பரப்பக்கூடியவர்களும் நாம் என்ன செய்ய வேண்டும் என்று உட்கார்ந்து யோசித்து கொண்டுள்ளார்கள். அவர்கள் தம் "புரோகிராமை" மற்ற "புரோகிராம்களை" தாண்டிக்கொண்டு ஸ்கிரீனில் வெறும் பதினைந்து வினாடிகளுக்காக வந்து விடுமாறு அமைக்கின்றனர். அந்த பதினைந்து வினாடியில காட்டும் படங்கள், அதைப்பார்க்கும் பையனின் மூளையில் புயலை கிளப்புமாறு செய்துவிடுகிறார்கள். ஒரு மாடலின் தோற்றத்தைக் காட்டிவிட்டு கீழே அதன் போன் நம்பரையும் கொடுத்துவிடுகிறார்கள். பிறகு அந்த பையன் அந்த தோற்றம் மீண்டும் தென்படுவதற்காக தானே தேட ஆரம்பித்துவிடுகிறான். பிறகு அதே இன்டர்நெட்டில் ஒருவருக்கொருவர் சலாம் கூற - பேச - தூது அனுப்ப ஆரம்பித்துவிடுகின்றனர். இதற்கு மக்கள் "சேட்டிங்" என்று வைத்துள்ளனர். இது உண்மையில் சேட்டிங் இல்லை (CHEATING) ஏமாற்றுதல் என்று சொல்லலாம்.இதன் மூலம் என்னவெல்லாம் நிகழ்வுகள் ஏற்படுகின்றனவென்றால் முஸ்லிம் பெண் குழந்தைகள் முஸ்லிமில்லாத ஆண் பையன்களுடன் நட்பு கொள்கின்றனர். "ஜீ! நான் இன்ன நாட்டில் இருக்கிறேன். எனது மகள், இன்ன காபிர் நாட்டின் காபிர் வாலிபரைக் கல்யாணம் செய்து கொள்வதாகக் கூறுகிறாள். "உனக்கு எப்படி அவருடன் தொடர்பு ஏற்பட்டது?" என்று கேட்டபோது, "இன்டெர்நெட் மூலம்" என்றாள்" என வேதனையுடன் கூறினார். இக்காலத்தில் இது ஒரு புதிய தொல்லை வந்துவிட்டது.

**மியூசிக் ஒரு அழிவுமிக்க புரோகிராம்:**

மேற்சொன்னதைவிட தற்போது மிக அதிக நட்டத்தை ஏற்படுத்தக்கூடியது மியூசிக் தான். நாம் மியூசிக்கை எவ்வளவு நட்டத்தை ஏற்படுத்தக் கூடியது என்று விளங்கி வைத்துள்ளோமோ, அதைவிட நூற்றுக்கணக்கான மடங்கு ஆபத்துமிக்கது. சற்று கவனித்துப்பாருங்கள்! எளியவனாகிய நான் இதுபற்றி போதுமான

ஆய்வு செய்துள்ளேன். முற்கால மியூசிக்கிற்கும் தற்கால மியூசிக்கிற்கும் இடையே வானம், பூமியின் வித்தியாசம் உள்ளது. சற்று விபரமாக உங்களின் முன் கூற விரும்புகிறேன். மனித மூளை அல்லாஹ்வின் வல்லமையின் மாபெரும் சாதனை. தினமும் லட்சோபலட்ச மருத்துவர்கள் உலகத்தில் இதற்காக அமர்ந்து இந்தச் சின்னஞ்சிறு உறுப்பின் மீது ஆய்வு செய்து கொண்டிருக்கின்றனர். அதன் Function - இயக்கத்தைப் பற்றி விளங்க முயற்சித்துக் கொண்டுள்ளனர். எனினும் மூளையின் பதினைந்து சதவீத பகுதியை மட்டும்தான் மனிதன் இதுவரை உபயோகித்து வருகிறான். மீதி 85 சதவீதத்தை இன்னும் மனிதன் உபயோகிக்க முடியவில்லை. எனினும் அப்பகுதியும் -ஃபங்ஷன் - இயங்கிக்கொண்டுதான் உள்ளது. அது என்ன ஃபங்ஷன் செய்து கொண்டிருக்கிறது என்பது இது வரை மனிதனுக்குத் தெரியவில்லை. அது ஆட்டோமேட்டிக் ஃபங்ஷன் செய்து கொண்டுள்ளது. மனித உடலில், சில செமிஆட்டோ # மேட்டிக் ஃபங்ஷனும், இன்னும் சில ஆட்டோமேட்டிக் ஃபங்ஷனும் உள்ளன. மனித மூளை ஒரு வினாடியில் தன் உடலின் பகுதிகளுக்கு ஒரு லட்சம் செய்திகளை அனுப்புகிறது. பிறகு ஒரு லட்சம் செய்திகளை மீண்டும் திரும்பப்பெறுகிறது. அது முழு உடலையும் நிர்வகிக்கிறது. முழு தொழிற்சாலையை மெயின்டெய்ன் செய்கிறது. நமக்கு ஒன்றும் தெரிவதில்லை. நாம் நமது கண், கை, வாய் மூலம் சிக்னல் தான் அனுப்பிக் கொண்டிருக்கிறோம். மீதியெல்லாம் ஆட்டோமேட்டிக் ஸிஸ்டப்படி நடைபெறுகிறது. அப்படி என்னவெல்லாம் நடக்கிறது என்பது ஒவ்வொரு மனிதனுக்கும் தெரியவே தெரியாது. எனவே நமது மூளையைப் பற்றி நாம் எவ்வளவு விளங்கிக் வைத்துள்ளோமோ அதை விடவும் மிக அதிகமாக தகவல்களை தன்னுள் வைத்துள்ளது.

**ஓர் உதாரணம்**

அதற்கு ஓர் உதாரணம் கூறுகிறேன். ஒருவர் ஒருவரின் பாஸ்போட்டிற்காக போட்டோ எடுக்கிறார் என்று வைத்துக்கொள்ளுங்கள். அவரை நிற்க வைத்து போட்டோ எடுக்கிறார். அவரது எண்ணமோ அவரது போட்டோ எடுக்க வேண்டும் என்பது தான். ஆனால் கேமிரா அவரது போட்டோவை பதிவு செய்து கொள்ளும் தான். எனினும் அத்துடன் அவருக்குப் பின்னால் உள்ள தோற்றத்தையும் பதிவு செய்து கொள்கிறது. இப்போது நீங்கள் கவனித்துப் பார்த்தால் அவருக்குப் பின்னால் பூமியில் விளைந்துள்ள புற்பூண்டுகளும் தெரியும். மரங்களும் தெரியும் அதில் முளைத்திருக்கும் பழங்களும் தெரியும். போட்டோ பிடிப்பவர் மனித உருவத்தைப் பதிவு செய்ய மட்டும் நினைத்தார். ஆனால் பின்னால் உள்ள முழு காட்சிகளையும் மனிதனுடைய நாட்டமில்லாமலேயே

கேமிரா பதிவு செய்து கொண்டது.

**இன்னொரு உதாரணம்.**

முற்றிலும் இதே போன்றுதான் நாம் எதையேனும் பார்க்க நினைத்தால் வெறும் அந்த பொருளை மட்டும் தான் பார்த்துக் கொண்டிருப்போம். எனினும் நமது மூளை அதைத் தவிரவும் அநேக தகவல்களைப் பெற்றுக் கொள்கிறது. இதற்கு உதாரணத்தையும் இப்போது கேளுங்கள். சற்று அது பற்றி சிந்தித்தும் பாருங்கள். அதன் பின் அற்புதமான யதார்த்தம் நமக்குப்புரியும். நீங்கள் கார் ஓட்டிக் கொண்டிருக்கிறீர்கள் என்று வைத்துக் கொள்வோம். ஜாம்பியாவின் ஒரு நகரமான "பட்டாவ்" என்ற இடத்திற்கு எத்தனை கிலோமீட்டர் உள்ளது என்பதை அறிய அறிவிப்புப்பலகையைப் பார்த்து படித்துவிட்டு பயணத்தை தொடர்கின்றீர்கள். இப்போது உங்கள் கண்கள் வெறும் கிலோமீட்டர் எண்ணை மட்டும் படிக்கவில்லை. இதற்கப்பாலுள்ள பல தகவல்களையும் கண்டுகொண்டது. உதாரணமாக அறிவிப்புப் பலகை நீல நிறத்தில் இருந்தது. அதில் வெள்ளை எழுத்துக்கள் பொறிக்கப்பட்டிருந்தன. அது பூமியிலிருந்து 18 அடி உயரத்தில் இருந்தது. அதன் பலகை 8 x 4 1/2 சைஸில் இருக்கிறது. என்பன போன்றவை. நீங்கள் சிந்தித்துப் பார்த்தால், இவற்றையெல்லாம் குறிப்பெடுக்கும் எண்ணம் இல்லாமலிருந்தது. வெறும் கிலோமீட்டர் அளவைப் பார்க்கத்தான் நினைத்திருந்தீர்கள். எனினும் இத்துடன் இவ்வளவு இன்ஃபார்மேஷன்களை மூளை தானாகவே கிரகித்துக் கொள்கிறது எனில் நமது மூளை எவ்வளவு அதிக இயங்கு சக்தி கொண்டது என்பதை நாம் இன்னும் விளங்கவில்லை. அநேக தகவல்களை தானாகவே திரட்டிக் கொள்கின்றது. இப்போது நாம் மனித மூளை வரை முழுமையாகச் சென்றடைவது எப்படி? என்பது பற்றி அறிவியல் ஆய்வாளர்கள் ஆய்வு முயற்சி மேற்கொண்டார்கள்.

**அறிவியலாளர்களின் சிந்தனை :**

கம்ப்யூட்டருக்கு இன்புட்ஸ் (INPUTS) தகவல் இடும் வழிகள் உள்ளன. உதாரணமாக கம்ப்யூட்டருக்கு நீங்கள் கீபோர்டு பொருத்தினால், "கீபோர்டு" மூலமும் கம்பயூட்டரில் தகவல்கள் செலுத்தமுடியும். "மவுஸ்" பொருத்தினால் அதன் மூலமும் தகவல்கள் வழங்க முடியும். "ஸ்கேனர்" இணைத்தால் அதன் மூலமும் தகவல் பரிமாற முடியும். கம்ப்யூட்டருடன் "டிஜிடைசர்" இணைத்து "டைகிராம்" வரைவதற்கு நாடினால் டிஜிடைசர் மூலமும் நீங்கள் அதில் தகவல்களை புகுத்தலாம். மேலும் நீங்கள் விரும்பினால், இன்னொரு கம்ப்யூட்டருடன் கனெக்ட் செய்து நெட்வொர்க் செய்ய நாடினால் அந்த கம்ப்யூட்டர் மூலமும் இதில் தகவல்கள் பெயர்த்த முடியும். ஒரே கம்ப்யூட்டர் ஹார்டிஸ்கில் பல விதத்திலும் தகவல்கள் பதிவு செய்ய

முடியும்..

**அறிவியல் நிபுணர்கள் மூளை வரை எப்படி சென்றார்கள்? :**

இவ்வாறே மூளைக்குள்ளும் பல்வேறு வழிகள் மூலம் தகவல்கள் வந்து சேர முடியும். கண் மூலம் தகவல் கிடைக்கிறது. நாவின் மூலம் தகவல்கள் வருகின்றன. மூக்கின் தகவல்கள் சேருகின்றன. கைகளின் மூலம் தகவல்கள் சென்றடைகின்றன. கால்கள் மூலம் செய்திகள் கிடைக்கின்றன. பல்வேறு வழிகளில் இன்புட் வருகிறது. உதாரணமாக, ஒருவன் ஏதேனும் ஒரு போதைப் பொருளை தன் வாயில் வைத்துள்ளான். அவன் வைத்துள்ளது வாயில்தான். ஆனால் அதன் பவர் எங்கெல்லாம் சென்றடைகின்றது! என்றால் நாம் விரும்புகிறபடி மனித மூளை வரை சென்றடையும் ஒன்றை நாமும் கண்டுபிடிக்க வேண்டும் என்று விஞ்ஞானிகள் யோசித்தனர். எனவே இதன் பேரில் ஆரம்பமாக எப்படி ஆய்வு நடத்தப்பட்டது என்றால், அதன் கதையை அதன் பின்னணியை நான் உங்களுக்கு சொல்லப்போகிறேன்.

முதன்மையாக ஒரு வாசனைத் திரவத்தைக் கண்டுபிடிக்க வேண்டும். அதை ஆண் பூசிக் கொண்டபின் அதை ஒரு பெண் நுகர்ந்தால் பெண்ணுக்கு காம உணர்வு பிறக்க வேண்டும் என்று யோசித்தனர். அதன்படி ஆய்வு செய்து ஒரு வாசனை திரவத்தைக் கண்டுபிடித்தனர். உதாரணமாக, "கோரம்" இதை மாணவர்கள் தடவிக் கொள்கிறார்கள். இத்தகைய நறுமணத்திற்குள் பிரத்தியேக தன்மை என்ன இருந்தது? என்றால், அதை யார் நுகர்ந்தாலும் நுகர்பவருக்கு அது காம உணர்வை விழிப்படையச் செய்கிறது. எனவே அவனது உள்ளம் நான் யாருடனாவது காமப் பேச்சுக்கள் பேச வேண்டும், காதல் பேச்சுக்கள் பேச வேண்டும் என நாடும்.

ஆக, அவர்கள் ஆண்களின் மீது பரீட்சித்துப் பார்த்தார்கள். அந்த வாசனைத் திரவத்தை எந்த ஆண் உபயோகித்தாலும் அவனுடன் பெண்கள் மிக சீக்கிரமாக அன்புப் பேச்சுக்கள் பேச ஆயத்தமாகிவிடுகிறார்கள் என்ற அனுபவத்தைக கண்டார்கள். பிறகு அவர்கள் இன்னொரு நறுமணத்தைக் கண்டுபிடித்தார்கள். அதை ஒரு பெண் பூசிக்கொண்டு எங்காவது நடந்து சென்றால் அதை நுகரும் ஆணின் மீது இதே உணர்ச்சிகள் வந்துவிடுவதைப் பார்த்தார்கள். நாம் முற்றிலும் வெற்றி கண்டுவிட்டோம் என்று கண்டார்கள். இந்த வெற்றிக்குப் பின் ஆண் உபயோகித்தால் பெண் தாக்கமடையும், பெண் உபயோகித்தால் ஆண் வயப்படும்படியான வாசனைத் திரவங்களைத் தயார் செய்துவிட்டார்கள். இதன் கருத்து என்னவென்றால் மனித மூளை வரை நாம் சென்றடைய முடியும் என்பதைக் காட்டுகிறார்கள்.

அடுத்து அவர்கள் ஒரு வகை வாசனைத்திரவம் கண்டுபிடித்தார்கள். ஒருவர் அதை நுகர்ந்துவிட்டால், உலகையே விலைக்கு வாங்கிவிட வேண்டும் என்ற மனத்துடிப்பு அவருக்கு ஏற்படும். எனவே விஞ்ஞானிகள் இதை ஒரு தெருவளவு விரிந்திருக்கும் மிகப்பெரும் டிபார்ட்மென்டல் ஸ்டோர்களில் பரீட்சித்துப் பார்த்தார்கள். அதன் ஏர்கண்டிஷன் காற்றுடன் அந்த வாசனைத் திரவத்தை ஸ்ப்ரே செய்துவிட்டால், ஐந்து டாலருக்கு சிற்றுண்டிக்கான பொருள் வாங்க நினைத்து வந்தவன் இந்த வாசனையை நுகர்ந்ததும் ஐம்பது டாலருக்கு பொருட்களை வாங்கிச் சென்றான். அவர்களது வியாபாரம் இதன் மூலம் ஒரேயடியாகப் பெருகிவிடுவதைப் பார்த்தார்கள். இந்த வாசனை மனித மூளையில் எந்தளவு தாக்கத்தை ஏற்படுத்துகிறது எனில், என்னிடம் இருக்கும் எல்லா பணத்தையும் கொடுத்து விலைக்கு வாங்க வேண்டும் என்றும் மனம் நாடுகிறது என்பது அனுபவத்தின் மூலம் நிரூபணமாகிவிட்டது. எனவே வருபவர்களிடம் ரொக்கப் பணமே இல்லாவிடினும் கிரடிட் மூலம் எல்லாவற்றையும் வாங்கிச் செல்கின்றனர்.

**அறிவியலின் ஒரு புதிய கண்டுபிடிப்பு :**

இந்த பரிசோதனையும் வெற்றிகண்டபோது, ஃபாக்டரிகாரர்கள் விஞ்ஞானிகளிடம், நாம் உங்களுக்கு ஒத்துழைப்புத் தருகின்றோம். மனித மூளை வரை சென்றடையும் வழிகளைத் தேடுங்கள்! எனவே, அவர்கள் யோசித்தார்கள் : மனித மூளை மின்சார அலைகளின் பேரில் இயங்குகின்றன. மின் அலைகளின் போது மூளையிலிருந்து செல்லும் சிக்னல், ஒரு மின் சிக்னலாக இருக்கிறது. இதனால்தான் வானொலி இயங்குகிறது. அதன் ஆன்டனாவை நீங்கள் பிடித்துக் கொண்டால், அதன் பவர் இன்னும் கூடிவிடும். அதாவது நீங்களே ஆன்டனாவாகிவிட்டீர்கள். நீங்கள் அதன் ஒலியை ஏற்று அதற்கு கொடுக்கிறீர்கள் என்பது கருத்து. ஏனெனில் மனித உடல் முழுவதும் மின் அலைகளால் இயங்கிக் கொண்டிருக்கிறது. இதை அறிந்த அவர்கள், நாம் அதே அலைகள் மூலம் மனித மூளை வரை சென்றடைய ஏதேனும் வழியுண்டா? என்று கண்டுபிடிக்க நினைத்தனர். எனவே, அவர்கள் யோசித்தார்கள். மனிதன் மியூசிக் கேட்கிறான் என்று வைத்துக்கொள்வோம். இந்த மியூசிக் முதலில் ஓர் ஒலியாக இருக்கிறது. எனினும் மனித உடலில் இது பின்னால் ''எலக்ட்ரிகல் வேவ்''(ELECTRICAL WAVE)-வின் மின் அலையாகிவிடுகிறது என்று யோசித்து இது பற்றியே ஆய்வு நடத்தலாயினர். இதற்கு (WAVELETANLYSIS) எனப்படுகிறது. எனவே அவர்கள் இதன் வேவலெட் எடுத்த போது, மியூசிக் கேட்கும் மனிதன் எழுந்து நடனமாட ஆரம்பித்துவிடுகிறான். இதை அறிந்ததும் அடே!

நமது ஆய்வு வெற்றிகரமாகிவிட்டதே! என்று மகிழ்ந்தனர். நாம் இது போன்ற வேவ்லெட் மியூசிக் கொடுத்தால் எந்த ஒரு மனிதனும் உடல் அசைக்கவும் எழுந்து நடனமாடவும் ஆரம்பித்துவிடுகிறானே! அப்படியானால் நாம் மனித மூளை வரை சென்றடையும் வழியைக் கண்டுபிடித்துவிட்டோமே என்று குதூகலித்தனர்.

எனவே இதன் பேரில் மேலும் ஆய்வுமுயற்சி செய்ய வேண்டும் என்று முயற்சித்து முயற்சித்து ஒரு வழிமுறையை கண்டுபிடித்தனர். அதற்கு (BACK TRACK SYSTEM) எனப்படுகிறது. அது என்னவென்றால் மியூசிக் என்பது (WAVE FORM) அலைகளின் வடிவத்தில் உள்ளது. அதன்மேல் தனது ஒரு மெஸ்ஸேஜை அமர்த்திவிடுகிறார்கள். உதாரணமாக குதிரை ஒன்று ஓடிக்கொண்டிருக்கிறது. அதன் மீது சவாரியை அமர்த்திவிடுவது போன்று என்று வைத்துக்கொள்ளுங்கள். இன்னொரு உதாரணம் கூட சொல்லலாம். நீங்கள் உங்களின் சகோதரர் ஒருவரின் வருகைக்காக அவர் உள்ளே வரட்டும் என்று கதவைத் திறந்தீர்கள். சகோதரரின் தோள் மீது ஒரு ஈயும் உட்கார்ந்துள்ளது எனில் சகோதரருடன் அந்த ஈயும் உள்ளே வந்துவிடுகிறது அல்லவா? இவ்வாறே ஒருவன் மியூசிக் கேட்கிறான். நான் புத்துணர்ச்சி பெற பாட்டுக்கேட்க வேண்டும் என நினைக்கிறான். எனினும் அந்த மியூசிக் மீது அவர்கள் அமர்த்தியுள்ள தூதும் தானாகவே அவனது மூளைக்குச் சென்றடைந்துவிடுகிறது. மனிதன் அதை தன் நினைவுடன் ஏற்கவில்லை. எனினும் அவனறியாமலேயே அவனது மூளைக்கு பாஸாகிவிடுகிறது. மூளைக்குச் சென்றதும் அது தன் வேலையைக் காட்டுகிறது. எனவே அனுபவ ரீதியாக எப்படி பரீட்சித்துப் பார்த்தார்களெனில், ஒரு பாட்டைத் தயார்செய்தார்கள். அதை மக்கள் விரும்பும் குரல்வளம் கொண்ட பாடகரின் மூலம் பாடச் செய்தார்கள். அலுவலகம் செல்லும் போதும், வரும் போதும் அதைக் கேட்கிறார்கள். வீட்டிலிருக்கும் போதும் வெளியில் செல்லும் போதும், பகலிலும் இரவிலும் எந்நேரமும் கேட்கிறார்கள். பிறகு அவர்கள் இந்தப் பாட்டின் மீது ஒரு மெஸ்ஸேஜை செட் பண்ணினார்கள். அந்த மெஸ்ஸேஜ் என்ன தெரியுமா? (KILL YOUR MUM) "உன் அம்மாவைக் கொல்!" என்ற தூதை அமர்த்தினார்கள். பிறகு அவர்கள் இதன் விளைவை ஆய்வு செய்தார்கள். எத்தனை வாலிபர்களுக்கு இந்த பாட்டு பிடித்திருந்ததோ, இதைப் பற்றுடன் கேட்டு வந்தார்களோ அவர்களுள் தன் தாயின் மீது எவ்வளவு கோபம் வந்தது எனில், அவளை நான் கொன்றே விட வேண்டுமென அவர்களது மனம் நாடியது. இந்த ஆய்வும் வெற்றிகரமான போது, யாருக்கெல்லாம் இந்தப் பாட்டு பிடித்ததோ அவர்கள் அனைவரின் மனோநிலையை ஆய்வு செய்ததில்

அது தத்தம் அன்னையருக்கு எதிராக ஆகிவிட்டது என்பதைக் கண்ட அவர்கள் இன்னொரு பிரபல பாடகருக்குச் சொல்லி வேறொரு பாட்டை பாட வைத்தனர். அதில் ஒரு மெஸ்ஸேஜை (KILL YOUR DAD) "அத்தாவைக் கொல்!" என்று கொடுத்தனர். பிறகு இந்த பாட்டைக் கேட்ட இளைஞர்கள் அனைவரையும் சர்வே செய்தார்கள். அவர்களின் மனங்களில் அத்தாவிற்கு எதிரான வெறுப்புணர்வுகள் காணப்பட்டது. இப்போது அவர்களுக்கு நன்றாகப் புரிந்துவிட்டது. நமது தூது மக்களின் விருப்பமின்றியே அவர்களின் மூளைக்குச் செல்கின்றது. மூளையின் நரம்புகளில் பதிந்து விடுகிறது. அது அறிவியல் உலகில் மாபெரும் வெற்றி.

**அகம் கெட்ட மனிதனின் ஆலோசனை :**

எனவே அந்நேர ஆளும் வர்க்கத்துடன் தொடர்பு கொண்டனர். நீங்கள் விரும்பினால் பொதுமக்களின் மூளையில் உங்கள் செய்தியை நாம் நிறைக்க முடியும் என்றனர் அவர்கள் கூறினார்கள் : அப்படியா? நல்லது தற்போது நம்மிடம் ஆண் ஆணைக் கல்யாணம் செய்து கொள்ளும் முறை ஆரம்பமாகியுள்ளது. நாம் அதற்கான அனுமதிச் சட்டம் அமைத்துவிட்டோம். எனினும் அநேக மக்கள் அதற்கு எதிராக உள்ளனர், எனவே நாங்கள் டிவியில் மியூசிக் மூலம் கேட்கச் செய்வதற்கேற்ப செய்தியை அமைத்துத் தாருங்கள். இதற்கு எதிராக இருக்கும் பொதுமக்கள் தங்கள் எதிர்ப்பை விட்டுவிடவேண்டும்".

எனவே அவர்கள் ஒரு மியூசிக் அமைத்து அதில் GAY LIFE STYLE என்ற சிக்னல் கொடுத்தார்கள். இப்போது மக்கள் மியூசிக் கேட்கிறார்கள் அத்துடன் இந்த செய்தியும் GAY LIFE STYLE, GAY LIFE STYLE, கிடைத்துக் கொண்டிருக்கிறது. சில மாதங்களுக்குள், இந்த வாழ்க்கை முறைக்கு எதிராக பெரிதும் பேசிக் கொண்டிருந்தவர்களெல்லாம், நாமும் இதே முறையில் வாழ்வோம் என்று இதைப் பிரியப்படக் கூடியவர்களாக ஆகிவிட்டதைக் கண்டனர். இந்த ஆய்வு வெற்றியாகிவிட்டதைக் கண்ட அவர்கள் நமக்கு நல்ல TOOL ஆயுதம் கிடைத்துவிட்டது. நாம் எத்தகைய மனிதனின் மூளையிலும் மியூசிக் மூலம் நாம் விரும்பும் எந்த செயதியையும் புகுத்த முடியும் என்று கூறினார்கள். பிறகு ஒரு பாட்டில், ஒரு செய்தியை (WORSHIP THE DEVIL)" ஷைத்தானை வணங்கு! ஷைத்தானை வணங்கு!" என்று புகுத்தினார்கள். பிறகு பார்த்தால் பெரும் மதவாதியாக இருந்தவர்களும் இந்தப் பாட்டை விரும்பிக் கேட்கலாயினர். கேட்ட பின் அவர்களும், இதுஎன்ன மதம்? இது என்ன தெய்வம்? நம் மனோ இச்சைப்படி வாழ்வோம் என்று சொல்லலானார்கள். இதன் மூலம் அவர்களுக்குப் புரிந்துவிட்டது. அப்படியானால் நமது ரகசிய தூதுகள் மூலம் மக்களை நம்

விருப்பத்திற்கேற்ப எப்படியும் வார்க்கலாம் என்ற முடிவுக்கு வந்துவிட்டனர். எனவே இதற்கான பல உதாரணங்களை நீங்கள் காணலாம். உதாரணமாக, செய்திகளில் ஒரு செய்தி அதில் ஓரிடத்தில் அநேக முஸ்லிம்கள் இறந்துவிட்டார்கள் அல்லது காஃபிர்கள் முஸ்லிம்களைக் கொன்றுவிட்டார்கள். இப்படி செய்து விட்டார்கள் அப்படி செய்துவிட்டார்கள் என மிக மோசமான செய்தி. ஆனால் இதற்கு முன் மியூசிக்கின் மூலம். IT IS NORMAL "இது சாதாரணமாக நடப்பதுதான்" என்ற மெஸேஜை கொடுத்து விடுகின்றனர். அந்த மியூசிக்கை கேட்டுக்கொண்டே இருந்துவிட்டு அந்த செய்தியைக் கேட்டால் "இது சாதாரணமாக நடப்பது தான்" என்று அவனே சொல்ல ஆரம்பித்துவிடுகிறான். ஆகவே எந்த ரியாக்ஷனும் ஏற்படுவதில்லை. ஆகவே தனது ஏதாவது ஒரு செய்தியைக் கொடுக்க வேண்டுமானால், அதற்கு முன் ஒரு செய்தி அனுப்பி, அதில் இது மிகப் பெரிய அநீதி. இவர்கள் கொடூரமானவர்கள் இப்படிப்பட்டவர்கள் என்ற தூதை மூளையில் பதிய வைக்கப்படுகிறது. அதன் பின் சிறிதளவு செய்தி காட்டினாலும், அதைப் பார்ப்பவர்களெல்லாம் இதுதான் இஸ்லாமா? இப்படித்தான் முஸ்லிமகளா? இவர்கள் காட்டுமிராண்டிகள். மூர்க்கர்கள் என்று பொரிந்து தள்ளி விடுமளவு ஆச்சரியமான எதிர்உணர்வு கொண்டுவிடுகிறார்கள்.

**ஊடகங்களின் நாகரிகம் :**

இங்கிருந்து இன்னொரு புதிய உலகம் பிறந்தது. அதை (CULTURE THROUGH MEDIA)"மீடியாவின் மூலம் தமது கலாச்சாரத்தை மக்களின் மூளையில் புகுத்து" இதை சி.டி.எம் எனப்படுகிறது. இது ஒரு புதிய அத்தியாயம். முற்காலத்தில் மியூசிக் என்பது டியூன்ஸ் மட்டும் தான் இருந்தது. அது ஹராமாக ஆக்கப்பட்டிருந்தது. ஆனால் இன்றோ, மியூசிக் ஹராம் என்பது மட்டுமல்ல, ஹராமுக்குள் ஹராம். ஹராமுக்கு மேல் ஹராம் என்று கூற வேண்டிய அளவு அதில் மனித ஈமான் பாழ்படும் அபாயமுள்ளது. முற்காலத்தில் மியூசிக் எவ்வளவு ஹராமாக இருந்ததோ, இன்று அதை பத்து மடங்கு கூட்டினாலும் குறைவுதான் எனுமளவு அபாயகரமானது. இதனால் தான் நீங்கள் பார்க்கலாம். மியூசிக் ரசனையுள்ள வாலிபனுக்கு என்னதான் புரிய வைத்தாலும் குஃப்ருடைய கலாச்சாரத்திற்கு எதிராக எந்த பேச்சையும் கேட்க விரும்பமாட்டான். நீங்கள் எவ்வளவு தான் முயற்சித்தாலும் பள்ளிவாசலுக்கு வர விரும்பமாட்டான். நல்லவர்களுடன் உட்கார சம்மதிக்கமாட்டான். அவன் யாருடைய பேச்சையும் கேட்க இசையமாட்டான். காரணமென்ன? மியூசிக்கின் மூலம், அவனது மூளையில் தீனுக்கு எதிராக எவ்வளவு நிறைக்கப்பட்டுவிட்டது எனில், அவன் அதன் அருகில் வரக்கூட சம்மதிக்கமாட்டான். மியூசிக்கின்

மூலம் குஃப்ருடைய கலாச்சாரம் பற்றி அவனுள் எவ்வளவு விஷயங்கள் திணிக்கப்பட்டுள்ளது எனில், அக்காலச்சாரத்திற்கு எதிராக எந்த பேச்சையும் கேட்க விரும்பமாட்டான். ஆகவே மியூசிக் இக்காலத்தில் குஃப்ருடைய தூதை மனித மூளையில் அனுப்பும் வழியாக ஆகிவிட்டது. மேலும் நாம் நம் குழந்தைகளை தாராளமாக மியூசிக் கேட்க அனுமதிக்கின்றோம். நம் குழந்தைகளோ, "அத்தா! நான் மியூசிக்தானே கேட்டுக் கொண்டிருக்கிறேன். எனக்கு (WALK MAN) வேண்டும்" என்கின்றனர். வாக்மேனில் நாம் வெறும் பாட்டு மட்டும் கேட்பதில்லை. பாட்டு மொழிகளுடன். மியூசிக்கில் ரகசியமாக குஃப்ருடைய எத்தகைய தூதுகள் நிரப்பப்படுகின்றனவெனில் அது நமது மூளையில் பதிந்து, அல்லாஹ் ரஸூலுக்கு எதிராக நம்மை உருவாக்கிக் கொண்டுள்ளன. நம்மை தீனை விட்டும் தூரமாக்கும் பணியைச் செய்து கொண்டிருக்கின்றன என்பது நம் குழந்தைகள் புரிவதில்லை.

**ஓர் அனுபவ செய்தி :**

எனது நெருங்கிய உறவுள்ள, என்னுடன் இஸ்லாஹி, சீர்திருத்த தொடர்புள்ள ஒருவரின் மகன் M.Sc.PhD., முடித்தவர் சொன்னார்: - "ஹஜ்ரத்! நான் இதை பழைய காலத்தவர்களின் விஷயம் என எண்ணிக் கொண்டிருந்தேன். எனினும் எங்களுடைய பிஎச்டி புரபஸர் வகுப்பறையில் முந்நூறு பேரைக் கூட்டி ஒரு பாட்டைக் கேட்கச் செய்தார். கேட்டபின் ஒவ்வொருவரிடமாக, "நீ இந்த பாட்டிலிருந்து என்ன செய்தி பெற்றாய்? சொல்" என்று கேட்டார். மாணவர்கள் நாம் இதைக் கேட்டு இதன் மொழிக்கேற்ற செய்தியைப் பெற்றோம்" என்றனர். பேராசிரியரோ, "இல்லை இது தவிரவும் வேறு ஒரு செய்தி நாம் உங்களுக்கு அனுப்பினோம்" என்றார். முந்நூறு மாணவர்களும், எங்களுக்கு இதைத்தவிர வேறு எந்த மெஸேஜும் கிடைக்கவில்லை என்றனர். புரபஸர் கூறினார்: "நான் இதன் மூலம் ஒரு செய்தி உங்கள் மூளையில் புகுத்திவிட்டேன்" என்று கூறி அவர் அந்த மியூசிக்கை பேக்டிரேக்கில்,(SLOW FREQUENCY) மெல்லிய அலைகளில் ஒலிக்கச் செய்தார். பிறகு மாணவர்கள் கூறினார்கள், " அதன் மீது ஒரு மெஸேஜ் அது எவ்வளவு மோசமான மெஸேஜ் என்றால் அல்லாஹ்வைப் பற்றி நாம் கற்பனை கூட செய்து பார்க்க முடியாது. அத்தகைய மெஸேஜை நாம் உணர்ந்தோம்". புரபஸர் கூறினார், "பாருங்கள்! நீங்கள் வெறும் மியூசிக் தான் கேட்டீர்கள். நான் அந்த மியூசிக் மூலம் உங்கள் மூளையில் இந்த மெஸேஜையும் போட்டுவிட்டேன்". அவர் நமக்கு மூளையைப் பற்றி விரிவுரை நிகழ்த்திக் கொண்டிருந்தார். ஆக டாக்டரேட் படிக்கும் அந்த மாணவர் சொல்லலானார், "இன்று அறிவியல் ஆய்வாளர்கள், மியூசிக்கின்

மூலம் தமது குஃப்ர் நிறைந்த தூதை அப்பாவி மனங்களுள் போடும் அனுபவ பரீட்சையை நிறைவுபடுத்திவிட்டார்கள் என்பதை நான் செயல் ரீதியாக பார்த்துக் கொண்டேன். "

**மியூசிக் பற்றி மாநபி (ஸல்) அவர்களின் அருள்மொழி :**

திரு நபி (ஸல்) அவர்கள் திருவுளமானார்கள் : அதன் கருத்தாவது. "இசை கேட்பதால் (மழை பெய்வதால் பூமியில் தாவரங்கள் முளைப்பது போன்று) இசை கேட்டவனின் மனதில் விபச்சாரத்தின் ஆசை பிறக்கிறது". இது வெறும் டியூன்ஸ் பற்றிய விஷயம் தான். இப்போதோ.டியூன்ஸிற்குள் ஷைத்தானை வணங்கு என்ற செய்தி போடப்படுகிறது. எனில்.(HATE YOUR RELIGION) "உன் மதத்தை வெறு!" என்ற ஆணை புகுத்தப்படுகிறது எனில். இதன் அபாயம் எவ்வளவு என்பதை உணர்ந்து பார்க்க வேண்டும். உங்கள் குழந்தைகளுக்கு அந்த பாட்டு பிடித்துவிடுகிறது. பகலில் அதை பதினைந்து இருபது தடவைகள் கேட்டுவிடுகிறார்கள். நீங்கள் நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். என் பையன் வெறும் மியூசிக்தான் கேட்டுக்கொண்டிருக்கிறான். ஆனால் இந்தச் சின்னஞ்சிறு கருவியின் மூலம் உங்களின் செல்லப்பிள்ளை உங்கள் மார்க்கத்தையே வெறுக்கக் கற்றுக் கொண்டிருக்கிறான் என்பது உங்களுக்கு என்ன தெரியும்?

தாமாகக் கெட்டுப்போக நினைக்காத குழந்தைகள் கூடக் கெட்டுப்போய் விடுகிறார்கள். ஏனெனில். மூளைக்குள் ஒரு செய்தி புகுந்துவிட்டது. "நான் இந்த எண்ணத்தை மனதிலிருந்து வெளியேற்றிவிட நினைக்கிறேன். ஆனால் வெளியேற மறுக்கிறது" என்று பலரும் பல தடவை சொல்வதை நாம் கேட்டிருக்கிறோம். அதன் கருத்து யாதெனில். சில விஷயங்கள் மூளையில் எவ்வளவு சிக்கிவிடுகின்றனவெனில். மனிதன் அவற்றை வெளியேற்ற நினைத்தாலும் வெளியேறுவதில்லை. ஏனெனில் அது எப்படிப்பட்ட மெஸேஜ் என்றால். மனிதன் அதை வெளியேற்ற முடியாதவாறு அவனது மூளையில் புகுந்து இடம்பெற்றுவிடுகிறது.

ஆகவே. இன்றைய காலத்தில். மியூசிக் குழந்தைகளை மிக அதிகமாக கெடுப்பதற்குள்ள வழியாக இருக்கிறது. நாமோ அதை மிக சாதாரணமாக நினைக்கிறோம். குழந்தைகள் இதைக் கேட்கும் போது அவர்களுக்கு தீனும் நல்லதாகத் தோன்றுவதில்லை. தம் பெரியவர்களும் நல்லவர்களாகத் தெரிவதில்லை. கட்டுப்பாடுகளும் அவர்களுக்குப் பிடிப்பதில்லை. எங்களுக்கு சுதந்திரம் வேண்டும் என்று அவர்கள் கூறுகிறார்கள். இத்தகைய சுதந்திரத்தின் மெஸேஜை அவர்களின் மூளையில் ஏற்றி விடுகின்றனர். அதனால். பதினைந்து பதினாறு வயதிலேயே பையன் சுதந்திரம் கேட்க

ஆரம்பித்துவிடுகிறான். பிறகு பெற்றோர் நம் பையனுக்கு என்னவாகிவிட்டது? என்று சொல்லி அழுது கொண்டிருக்கின்றனர். எனவே நன்கு நினைவில் வையுங்கள்! இக்காலத்தில் இந்த மீடியாக்கள் நம் குழந்தைகளை நாசப்படுத்தும் மிகப் பெரிய வழியாக ஆகியிருக்கின்றன.

**"அடியானின் இயலாமை":**

இதனடிப்படையில் இந்த எளியவனாகிய நான் சில நண்பர்களிடம் இது தொடர்பாக பேசினேன். அவர்களில் சமீபத்தில் இஸ்லாம் தழுவிய சகோதரர்கள் சிலர் என்னிடம் ஒரு விஷயத்தைக் குறிப்பிட்டார்கள் : "ஹஜ்ரத்! நாங்கள் இஸ்லாம் மார்க்கத்திற்கு வந்துவிட்டோம். இறையச்ச வாழ்வை மேற்கொள்ளவும் ஆரம்பித்துவிட்டோம். தஹஜ்ஜுத் தொழும் பழக்கமும் வந்துவிட்டது. சுன்னத்தை பின்பற்றுபவர்களாகி விட்டோம். எனினும் எங்களுக்குள்ள ஒரு பிரச்சனையை கூறுகிறோம். அது யாதெனில், எல்லாவித பாவங்களையும் விடுவது எங்களுக்கு இலகுவானது. எனினும் மியூசிக்கை விடுவது மிகச் சிரமமான ஒன்று." தஹஜ்ஜுத் களாவாகாத வாலிபர். இவ்வளவு நல்ல - திக்ரு மஃமூலாத்துகள் செய்பவரின் கூற்றைத்தான் உங்களுக்கு நான் சொல்லிக் கொண்டிருக்கிறேன். ஒரு வாலிபர் கூறினார் : "ஹஜ்ரத்! அந்நியப் பெண்களை நான் கண்ணெடுத்துப் பார்ப்பதில்லை. இவ்வளவு நல்ல வாழ்க்கை வாழ்ந்து கொண்டுள்ளேன். எனினும் போகும் வழியில் முன்பு கேட்ட பழைய பாட்டு என் காதில் விழுந்துவிட்டால், அடிமனதில் தூண்டுதல் ஏற்பட்டு, என்னைக் கட்டுப்படுத்திக்கொள்ள இயலாமல் ஆகிவிடுகிறேன்".

இதன் மூலம் இந்த மியூசிக் மனிதனுள் ஆழ்ந்த தாக்கத்தை ஏற்படுத்துவதன் காரணமாக அடியான் இயலாமல் ஆகிவிடுகிறான் என்பது தெரிகிறது. இதனால் தான் இக்காலத்தில் இந்த மியூசிக் மனிதனுக்கு மிகப்பெரிய அபாயகரமாகிவிட்டது. ஈமானை அழிக்கக் காரணமாகிவிட்டது என்று கூறினேன். இதனால் தான் மாணவர்கள் தம் நோக்கத்தின் பால் செல்வதற்கு பதிலாக தவறான பாதையில் சென்றுவிடுகிறார்கள். அவர்களின் மனது "ஜாலி பண்ணு!" என்று தான் நாடுகிறது. ஏனெனில் அவனுக்கு பேக்டிரேக்கில்"ஜாலி பண்ணு!" என்ற செய்தி கிடைத்துவிட்டது. இனி அவன் படிப்பதையும் பார்க்கமாட்டான். "ஜாலி பண்ணு!" "ஜாலி பண்ணு!" என்று தான் சொல்வான். இரவு பகல் அவனுக்கு இதே சிந்தனைதான் இருக்கும். எனவே இந்தத் தொல்லையிலிருந்து உங்கள் பிள்ளைகளை காப்பாற்றுங்கள்!

**"நாம் எவ்வளவோ மாறிப்போய்விட்டோம்! " :**

அல்லாஹ்வின் அருளைப் பாருங்கள்! நமது தப்லீக் நண்பர்கள்

கஷ்துக்குச் சென்றால் அவர்கள் வீட்டுக்காரரை கதவிற்கு வெளியில் தட்டி வெளியில் அழைக்க வேண்டியிருக்கிறது. வெளியே வருவதும் வராததும் அவரது விருப்பம். எனினும் எந்த மீடியாவின் மூலம் நமது குழந்தைகளின் மனதில் குஃப்ரின் அசுத்தத்தை நிரப்பப்படுகிறதோ அதை நாமே நமது படுக்கை அறையில் டி.வியின் வடிவத்தில் அலங்கரித்து வைத்துள்ளோம். அவர்களுக்கோ உங்களின் படுக்கை அறையில் நுழைவு கிடைத்துவிட்டது. நமக்கோ உங்களின் வாசல்கள் வரை கூட அனுமதி கிடைக்கவில்லை. நன்மையின் பால் - அல்லாஹ்வின் பால் அழைப்பவர்களை வாசற்படியிலேயே விரட்டி அனுப்பப்படுகிறது. அவாகளை உங்கள் வாயில் வரை வரக்கூட அனுமதியில்லை. இந்த வேதனையை யாரிடம் சொல்வது?... நீங்கள் அலுவலகத்திற்குச் சென்றுவிடுகிறீர்கள். உங்கள் மனைவி படுக்கை அறையில் படுத்துக் கொண்டு தொலைக்காட்சியைப் பார்த்துக் கொண்டிருக்கிறாள். டி.வி.யில் காஃபிர் அமர்ந்து கொண்டு, அவளின் முன் தன் குஃப்ரை பிரச்சாரம் செய்து கொண்டிருக்கிறான். பாட்டு இசைக்கப்படுகிறது. அப்பாட்டில், உங்களின் மனைவியின் மூளைக்குள் தீய உணர்வுகள் விதைக்கப்படுகிறது. இந்த அனுமதியை நீங்களே அவளுக்கு வாங்கிக் கொடுத்துள்ளீர்கள். இதனால்தான் எளியவனாகிய நான் இந்த டி.,வி. உண்மையில் ஈமானின் காசநோய் என்று சொல்கிறேன். ஆக, நமது வாலிபர்கள் தூய்மையான இளமையை கழிக்க நாடினால், இந்த மீடியாவின் தாக்குதலிலிருந்து நம்மை நாமே, இன்னும் நம் செல்லக் குழந்தைகளை காப்பாற்ற வேண்டும்.

**"ஒவ்வொன்றுக்கும் ஓர் ஒழுங்கு முறை இருக்கிறது" :**

என் அன்பு இளவல்களே! மனிதன் ஏதேனும் வேலையை அதன் உரிய நேரத்திற்கு முன் செய்ய ஆரம்பித்துவிட்டால், அவனது சுய வாழ்க்கையின் ஒழுங்குமுறை கெட்டுபபோய்விடும். ஓவவொன்றும் அதனதன் நேரத்தில் தான் அழகாயிருக்கும். உதாரணமாக நீங்கள் கல்வி கற்றுக் கொண்டுள்ளீர்கள். கல்விக் காலத்திலேயே கல்யாணம் முடித்துவிட வேண்டும் என்று நாடினால் இது உரிய நேரத்திற்கு முன்னால் செய்யும் செயலாகிவிடும். பிறகு அது உங்களை கல்வி கற்க விடாது. உங்கள் பெற்றோர்கள் உங்களை கல்வி கற்கச் சொன்னார்கள். மன ஓர்மையுடன் கல்வியில் ஈடுபடுங்கள். நீங்கள் வேலையில் ஈடுபட்டிருந்தால் தம் வேலையில் மனம் லயித்துச் செய்யுங்கள். பிறகு குடும்பம் நடத்தும் தகுதியான வயது வந்துவிட்டால், பிறகு உங்கள் பெற்றோர்கள் உங்களுக்கு கல்யாணத்தின் ஏற்பாடு செய்துவிடுவார்கள்.

எனவே உரிய நேரத்தில் எந்த விஷயம் நிகழ்ந்தாலும் உங்கள்

வாழ்க்கையின் ஒழுங்கு முறை மிக சீராக இருப்பதை நீங்கள் பார்பபீர்கள். மேலும் உங்களுக்கு வெற்றிகள் கிடைக்கும். ஒழுங்கு முறையை மாற்றினால் உங்கள் வாழ்வை உங்கள் கைகளினாலேயே அழித்துக் கொள்வீர்கள். எத்தனையோ இளைஞர்கள் பள்ளி, கல்லூரி காலத்தில் நட்புப் பைத்தியத்தில் சிக்கி விடுகின்றனர். பிறகு அவர்கள் கல்வியையும் பூர்த்தி செய்ய முடிவதில்லை. அவர்கள் தம் வியாபாரம் தொழிலிலும் செயல்படமுடிவதில்லை. இதனால்தான் எத்தனையோ இளைஞர்கள் காலம் வருமுன் நோயில் அகப்பட்டு விடுகிறார்கள். பக்கத்து நாட்டு வாலிபன் ஒருவன் என்னிடம் வந்தான். "ஹஜ்ரத்! ஒரு வாரத்திற்குப்பின் இந்த உலகை விட்டும் பிரிந்துவிடுவேன். நான் எய்ட்ஸ் நோயாளி. நான் என்ன செய்வது? எனக்கும் கெட்ட பெயர், என் குடும்பத்துக்கும் கெட்ட பெயர்" என்று புலம்பினான்.

இப்போது சொல்லுங்கள் ஒரு பையனின் தவறால் இரண்டு குடும்பங்களின் நிம்மதி பறிபோய்விட்டதல்லவா? எனவே எந்த விஷயமும் அதனதன் நேரத்தில் தான் அழகு தரும். படிக்கும் நேரத்தில் படியுங்கள்! விளையாடும் நேரத்தில் விளையாடுங்கள்! தூங்கும் நேரத்தில் தூங்குங்கள்! தொழவேண்டிய வேளையில் தொழுங்கள்! மற்றும் இதர வேலைகளை அதனதன் நேரத்தில் செய்யுங்கள்! வாழ்வின் ஓர் ஒழுங்கு முறையை அமையுங்கள்! அதற்கேற்ப செயல்படுங்கள்! எந்தநேரமும் மூளையில் ஷைத்தானிய எண்ணங்கள் இருப்பின், மனிதன் எந்நேரமும் காம சிந்தனைகளில் மூழ்கியிருப்பான். மனிதன் எந்நேரமும் காம சிந்தனைகளில் மூழ்கியிருப்பின் வாழ்க்கையே சீரழிந்துவிடும். இன்றைய காலத்தில் பெரும்பாலான இளைஞர்களின் சிந்தனையில் எந்நேரமும் இச்சையின் எண்ணங்கள் குடி கொண்டுள்ளன. எந்நேரமும் அவர்களின் மனதில் பெண்ணின் நினைவுகள் அலை மோதிக் கொண்டுள்ளன. பாவங்களில் ஈடுபட்டு மனிதன் தீனையும் பாழ்படுத்தி துன்யாவையும் வீணாக்கி உட்கார்ந்திருக்கின்றான். ஒரு கவிஞர் சொல்வது போல்...

**"இறைவனும் கிடைக்கவில்லை, சிலைகளையும் அடையவில்லை"....**

"இப்பக்கமும் இருக்க முடியவில்லை, அப்பக்கமும் இருக்க முடியவில்லை"இளைஞர்கள் இன்றைய சூழ்நிலையில் எண்ணற்ற பாவங்களில் வீழ்ந்து விடுகின்றனர். அதில் தகாத பார்வை, ஆபாச செயல் ஆகிய இந்த பாவங்கள் பெரிதும் பரவிக் கொண்டிருக்கின்றன. சற்று இன்னொரு விஷயத்தையும் கேட்டுக்கொள்ளுங்கள். அனைவரும் சற்று கவனமாக கேளுங்கள்! ஆலிம்கள் கிதாபுகளில் எழுதியுள்ளனர் : "நீங்கள் அந்நிய பெண்களுடன் தவறான உறவு

கொண்டால் மற்றவர்கள் உமது பெண்களுடன் தகாத உறவு கொள்வார்கள்" என்று திரு நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். இது பரிசுத்த நபிமொழி. நாம் அந்நியப் பெண்களின் மீது தவறான பார்வை வீசினால், யாராவது நமது பெண்களின் மீது தவறான பார்வை செலுத்துவார்கள். இது பற்றி ஆலிம்கள் : "விபச்சாரம் எத்தகைய பாவம் எனில் இதற்கு பழிக்குப்பழி உள்ளது" என்று குறிப்பிட்டுள்ளார்கள். இமாம் ஷாபியீ போன்ற சட்ட மேதைகளும் இது பற்றி கவிதை கூறியுள்ளார்கள். தம் கவிதையில், "விபச்சாரம் ஒரு பாவம் அதற்கு பழிக்குப்பழியுண்டு" எனக் கூறியுள்ளார்கள். பழிக்குப்பழி என்றால் என்ன? அவன் செய்த குற்றம் போன்றே அவனிடம் செய்யப்படும். உதாரணமாக ஒருவன் அடுத்தவனைக் கொலை செய்துவிட்டால் அதற்குப்பகரமாக அவனையும் கொலை செய்யப்படும். இதைத்தான் "கிஸாஸ்" பழிக்குப்பழி எனப்படும் "கிஸாஸ்" என்ற சொல்லைப் பயன்படுத்தியுள்ளார்கள். விபச்சாரம் ஒரு பாவம், ஓர் அடியான் அதைச் செய்தால் அவ்வாறே அவனுடன் செய்யப்படும் விதமான குற்றம்தான் விபச்சாரம். இதற்கு எடுத்துக்காட்டாக ஓர் உண்மைச் சம்பவத்தைக் கூறுகிறேன் கேளுங்கள்!

புகாராவில் ஒரு நகை வியாபாரி இருந்தான். அவனது மனைவி நல்ல குணமுள்ளவள். தோற்றத்திலும் அழகுள்ள கண்ணியமான பெண். அவர்களது வீட்டிற்கு பத்து பதினைந்து ஆண்டுகளாக தண்ணீர் ஊற்றும் ஊழியன் ஒருவன் வந்து கொண்டிருந்தான். ஒருநாள் அவன் தண்ணீர் ஊற்ற வந்தபோது அந்த பெண்ணின் கையைப் பிடித்து ஆசையுடன் அமுக்கிவிட்டான். பிறகு போய்விட்டான். அந்த பெண்ணிற்கு பேரதிர்ச்சியும் பெரு வேதனையும் ஏற்பட்டது. பதினைந்து ஆண்டுகளாக நம் வீட்டிற்கு ஒழுக்கமாக வந்து போய்க் கொண்டிருந்தவன், இவ்வளவு நம்பத்தகாதவனாக ஆகிவிட்டானே என்று அவளுக்கு அழுகை வந்துவிட்டது. பெரும் கவலையுற்றாள். இதற்குள் அவனது கணவனும் வந்துவிட்டான். மனைவி அழுது கொண்டிருப்பதைப் பார்த்து என்ன நடந்தது? ஏன் அழுகின்றாய்? என வினவினான்.

அவள் நடந்ததை சொன்னாள்: "பாருங்கள்! நம் வீட்டிற்கு பதினைந்து ஆண்டுகளாக தண்ணீர் ஊற்ற வந்து கொண்டிருக்கின்றான். இன்று வந்தபோது அவன் எனது கையைப் பிடித்து இவ்வாறு அமுக்கிவிட்டான்" என்றாள். இதைச் செவியுற்ற நகை வியாபாரியின் கண்களிலும் நீர் கோர்த்தது. மனைவி கேட்டாள் : "நீங்கள் ஏன் அழுகிறீர்கள்?" கணவன் சென்னான் : "இது அவனது தவறல்ல, எனது தவறுதான்" - அதற்கு, "நீங்கள் என்ன தவறு செய்தீர்கள்?" என்று மனைவி கேட்க - "இன்று ஒரு பெண்

வளையல்கள் வாங்க வந்திருந்தாள். அவளுக்கு வளையல் பிடித்தது. "எனக்கு அணிவித்துவிடுங்கள்!" என்றாள். நான் அணிவித்த போது அவளது கை மிருதுவாகவும் அழகாகவும் இருந்தது. எனக்குப் பிடிக்கலானது. நான் அவளது கைகளை ஆசையுடன் அழுக்கினேன். அதன் பகரமாகத்தான் வேலைக்காரன் எனது மனைவியின் கையை ஆசையுடன் அழுக்கிவிட்டான்" என்று கூறிய அவன் "நான் தவ்பாச் செய்கிறேன். இதற்குப் பிறகு இனி இதுபோன்ற பாவம் செய்யமாட்டேன்" என்றான்.பிறகு கடைக்குச் செல்லும்போது,"இனி அந்த வேலைக்காரன் மீண்டும் ஏதாவது செய்தால் எனக்குச் சொல்" எனக் கூறிச் சென்றார். மனைவி சரி என்றாள். அடுத்த நாள் தண்ணீர் ஊற்ற வந்தவன், அப்பெண்ணிடம். "நேற்று என் மீது ஷைத்தான் ஏறிவிட்டான். நான் பெரிய பாவம் செய்துவிட்டேன். நான் உண்மையான தவ்பா செய்துவிட்டேன். இனிமேல் இதுபோன்ற பாவம் ஒருபோதும் செய்யமாட்டேன். மன்னித்துவிடுங்கள்" என்றான். அந்தப்பக்கம் நகை வியாபாரி தவ்பாச் செய்தான். இந்தப்பக்கம் இவன் தவ்பாச் செய்துவிட்டான். அந்தப்பக்கம் அவன் பாவம் செய்தான். இந்தப்பக்கம் இவனது மனைவியுடன் அதே பாவம் செய்யப்பட்டது.

எனவே ஓர் ஆலிம் இதை ஒரு மன்னருக்குச் சொன்னார்.. "அப்படியா! இதை நான் பரீட்சித்துப் பார்ப்பேன்" என்று மன்னன் கூறினான். நான் எனது வாழ்வில் எப்போதும் எந்தப் பெண்ணுடனும் இது போன்று நடந்ததில்லை" என்று கூறிய மன்னன் தனது மகளிடம், "மகளே! நீ சற்று வெளியே சென்று ஊரை ஒரு வட்டமடித்துவா!" என்று கூறினார். இளவரசியின் ஆடைகளைக் களைந்துவிட்டு, பொதுமக்கள் அணியும் நல்ல அழகான உடையணிந்து கொண்டு சுற்றி வா! என்று கூறி துணைக்கு ஓர் பெண்ணையும் "என்ன நடக்கிறது? என்று பார்த்துவா!" என்று அனுப்பிவைத்தார். அந்த இளவரசி ஊர் முழுவதும் சுற்றி வந்துவிட்டது. யாரும் அவளின் மீது கண்ணெடுத்துப் பார்க்கவில்லை. திரும்பிவந்து அரண்மனையிலுள்ள தன் அறைக்குச் சென்று கொண்டிருக்கிற போது சாதாரண உடையில் இருந்ததால் அரண்மனைக்குள் வேலைசெய்யும் ஒரு வாலிபன் அவள் இளவரசியா? சாதாரணப் பெண்ணா? என்று தெரியாததால் அவளும் ஒரு பணிப்பெண் என நினைத்துக் கொண்டு குறும்புத்தனம் செய்தான். கட்டியணைத்து முத்தமிட்டுவிட்டு ஓடிவிட்டான்.

இப்போது இளவரசி வந்து தன் தந்தையிடம் முழு விபரத்தையும் சொன்னாள். சிறிது நேரம் மௌனித்திருந்த மன்னர் சொல்லலானார். "சொன்னவர்கள் சரியாகத்தான் சொன்னார்கள். இப்போது எனக்கு நான் இளமைக் காலத்தில் செய்த ஒரு செயல், நானும் ஒரு பெண்ணைக் கட்டியணைத்து முத்தமிட்டது நினைவுக்கு

வந்துவிட்டது. நான் செய்ததைத்தான் என் மகளுடன் செய்யப்பட்டுள்ளது. நான் என் பார்வையை தாழ்த்திக்கொள்ள ஆரம்பித்ததும் நகர மக்கள் அனைவரும் என் மகளை கண்ணெடுத்தும் பார்க்கவில்லை" இதைத்தான் - கிஸாஸ் - பழிக்குப்பழி - எனப்படுகிறது. நாம் அடுத்த பெண்களுடன் எப்படி நடந்து கொள்வோமோ அப்படியே நம் பெண்களுடன் நடந்து கொள்ளப்படும். இதைத்தான். சகோதரன் சிலநேரம் விபச்சாரம் கொண்டிருப்பான். அதன் கடனை சகோதரி அடைந்து கொண்டிருப்பாள். விபச்சாரம் கணவன் செய்கிறான். அவனது மனைவி அதன் கடனை செலுத்த வேண்டியதேற்படுகிறது. தந்தை விபச்சாரம் செய்கிறான். அதன் கடனை மகள் அடைக்க நேரிடுகிறது.

திருநபியவர்களின் ஒரு பொன்மொழியைப் படித்தேன். அதற்கு ஆதார நூலைக் கூட என்னால் சொல்லமுடியும். "நீங்கள் அந்நியப் பெண்களுடன் விபச்சாரம் செய்தால் உங்கள் பெண்களுடன் அந்நியர் விபச்சாரம் செய்வர். எந்தளவுக்கு என்றால் உங்கள் சுவர்களுடனும் விபச்சாரம் செய்யப்படும் -" இது இறைவன் ஏற்படுத்திய அமைப்பு. எனவே. எந்நேரமும் இதுபோன்ற செயல்களில் ஈடுபட்டிருக்கும் வாலிபர்கள் யோசிக்க வேண்டும். நமக்கும் சகோதரிகள். தாய்மார்கள். பெண்மக்கள். மனைவிமார்கள் உள்ளனர். நாம் அடுத்தவர்களின் பெண்களின் பின்னால் அலைந்து திரிந்தால். நம் பெண்களின் மீது அடுத்தவர்களின் தகாத பார்வை விழத்தான் செய்யும். இதனால்தான் இந்த பாவத்திலிருந்து பெரிதும் தப்பிக்க வேண்டும். இமாம் ஷாஃபியீ (ரஹ்) கூறுகிறார்கள். "விபச்சாரம் அடியானின் மீது ஒரு கடனாகும். இந்தக் கடனை பின்னால் அவனது நெருங்கியவர்களில் யாரேனும் ஒருவர் கட்டாயம் நிறைவேற்றியே ஆக நேரிடும்" அல்லாஹ் ரப்புல்ஆலமீன் இப்பாவத்திலிருந்து நாம் உண்மையாக தவ்பாச் செய்து விலக அருள்புரிவானாக!

**"ஸெய்யிதுனா யூசுஃப்(அலை) அவர்களின் சம்பவம்"**

உங்களின் முன் ஒரு சம்பவத்தைக் கூறி எனது உரையை நிறைவு செய்துகொள்கிறேன். கவனமாகக் கேளுங்கள்! அல்லாஹ் இதைத் தனது திருமறையில் "அழகிய கதை" என்று குறிப்பிட்டுள்ளான். இதை அழகிய கதை என்று ஏன் சொல்லப்பட்டது? அதன் காரணம் யாதெனில். இதில் இரு சாராரின் சம்பவங்கள் சொல்லப்பட்டுள்ளன. ஒன்று ஹஜ்ரத் யூசுஃப் (அலை) அவர்களின் உடன்பிறப்புக்களின் ஒரு குழு"நாங்கள் பெரிய வலிமையான குழு" என்று தங்களைத் தாங்களே சொல்லிக்கொண்டவர்கள். இன்னொன்று ஒரு குழுவின் இடத்தில் இருந்த ஹஜ்ரத் யூசுஃப் (அலை) அவர்களோ... சிலவேளை ஒருவர் தனி நபராக இருப்பார். ஆனால் தனி ஒரு

குழுவின் ஸ்தானத்தில் இருப்பார். இன்னவர் தன்னளவில் ஒரு சங்கமாக இருக்கிறார் என்று சொல்வதுண்டு. இன்னவர் தன்னளவில் ஒரு நிறுவனமாகத் திகழ்கிறார் என்பர். பார்ப்பதற்கு சிலர் தனி நபராகக் காட்சியளிப்பார். ஆனால் செயலிலும் சாதனையிலும் ஒரு முழு நிறுவனமாக இருப்பர். அல்லாஹ்வே கூறுகிறான். நபி இப்ராஹீம் (அலை) அவர்கள் ஒரு சமுதாயமாக இருந்தார்கள். ஆனால் அவர்கள் ஒரு தனி நபராகத்தான் இருந்தார்கள். இதே போன்று ஹஜ்ரத் யூசுஃப்(அலை) அவர்கள் ஒரு ஜமாஅத் - குழுவாக இருந்தார்கள். இப்போது இரு சாராரின் மீதும் சோதனை வந்தது. இருவரின் செயல்பாடும் வெவ்வேறாக இருந்தது. எனவே இருவரின் முடிவும் வெவ்வேறாக ஆனது.நபி யூசுஃப்(அலை) அவர்களின் சகோதரர்கள் தம் மனதில்."நமது தந்தை. தம்பி யூசுஃபிடம் அதிக அன்பும் பாசமும் காட்டுகிறார். நாமோ எண்ணிக்கையில் அதிகமாகவும். "நஹ்னு உஸ்பதுன்" வலிமைமிக்க கூட்டமாகவும் இருக்கிறோம்.நம்முடைய தந்தை என்னவோ சுத்த தவறில் இருக்கின்றார்" என்று கூறிக்கொண்டனர். எனவே. இப்போது அதற்கு ஏதேனும் தீர்வுகாண வேண்டும். உம்! சொல்லுங்கள் என்ன செய்யலாம்? சிலர் "யூசுஃப் (அலை) அவர்களைக் கொலை செய்யுங்கள்" என்றனர். சிலர். "யாரும் காண முடியாத பூமியில் எறிந்துவிடுங்கள்! பிறகு நம் தந்தையின் பாசம் உங்களுக்கென்றே ஆகிவிடும்" என்றனர். "பிறகு இந்த ஒரு தவறுக்குப்பின் திருந்தி நல்லவர்களாகிக் கொள்ளலாம்" என்றனர். இங்கே ஒரு முக்கிய விஷயத்தை சற்று கவனியுங்கள்! ஷைத்தான் அவர்களின் மனதில் "உங்களின் சகோதரனைக் கொன்றுவிடுங்கள்! அல்லது எங்காவது தூரத்தில் எறிந்துவிடுங்கள்! மேலும் இந்த பாவத்தை செய்த பின் நல்லவர்களாகிக் கொள்ளலாம்" என்று போட்டான். அதாவது இப்போது செய்யவேண்டிய பாவத்தை செய்துவிடுங்கள். பின்னால் தவ்பா செய்து கொள்ளலாம். நல்லவர்களாகிவிடலாம் என்று தட்டிக்கொடுத்தான்.ஆக. சகோதர்களின் மூளையில் உதித்ததை - பாவத்தை செய்துவிட்டார்கள். சகோதரனை கிணற்றில் போட்டுவிட்டார்கள். இப்போது மறுபக்கம் ஹஜ்ரத் யூசுஃப் (அலை) அவர்களை ஒரு பயணக்குழு கிணற்றிலிருந்து காப்பாற்றியது. இறுதியாக அல்லாஹ் அவர்களை எகிப்தின் கவர்னர் மாளிகையில் கொண்டு சேர்க்கச் செய்தான். கவர்னர் மாளிகைக்கு வந்ததும் அதன் எஜமானியின் மனதில் தீய எண்ணம் வந்துவிட்டது. எனவே. ஒரு கட்டத்தில் ஹஜ்ரத் யூசுஃப் (அலை) அவர்களின் முன் அடைக்கப்பட்டுள்ள அறையில் தன் தீய எண்ணத்தை வெளிப்படுத்தினாள். "என்னிடம் வந்துவிடு" என அழைத்தாள். இப்போது நபி யூசுஃப்(அலை) அவர்கள் தற்சமயம் இந்த பாவத்தை

செய்து கொள்ளலாம் பின்னால் திருந்தி நல்லவனாகிவிடலாம் என்று யோசிக்கவில்லை. அவர்களின் செயலே வேறுவிதமாக இருந்தது. "அவள் என்னிடம் வந்துவிடு!" என அழைத்ததுமே "மஆதல்லாஹ்" நான் அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடுகிறேன் என்று சொல்லிவிட்டு பயந்தவர்களாக அங்கு நிற்காமல் தப்பிக்க ஓடினார்கள். அல்லாஹ். அடைக்கப்பட்ட வாயில்களை திறக்கச் செய்துவிட்டான். அல்லாஹ். அவர்களை அதிலிருந்து காப்பாற்றிவிட்டான். நீண்ட வரலாறு. இறுதியாக அவர்கள் சிறைக்குச் செல்ல நேரிட்டது. பிறகு ஒரு நேரத்தில் சிறையிலிருந்து விடுவிக்கப்பட்டார்கள். பிறகு உயர் பதவியில் அமர்த்தப்பட்டார்கள். எகிப்தில் நபி யூசுஃப்(அலை) அவர்களுக்கு உறவினர்கள் யாரும் இல்லை. அங்கே அவருக்கு ஓட்டு வங்கியும் இல்லை. எந்த நண்பர்களும் இல்லை. சிறையில் தன்னந்தனியாக இருந்தார்கள். எனினும் பயந்து அல்லாஹ்விற்கு கட்டுப்பட்டு இருந்தார்கள். அல்லாஹ் அவர்களை மண்ணிலிருந்து விண்ணுக்கு உயர்த்திவிட்டான். சிம்மாசனத்தில் அமரச் செய்தான்.

மறுபக்கத்தில் அவரது சகோதரர்கள் தம் இச்சைப்படி நடந்து காரியத்தை சாதித்தனர். தப்பு செய்துவிட்டு பின்னால் நல்ல பிள்ளையாகிவிடலாம் என்று தப்புக் கணக்குப்போட்டனர். என்ன நிகழ்ந்தது? அவர்களுக்கு வறுமை வந்தது. உண்ண உணவும் கிடைக்காமல் போனது. எனவே தானியங்கள் பெறுவதற்கு நபி யூசுஃப் (அலை) அவர்களிடம் வந்தனர். ஹஜ்ரத் யூசுஃப்(அலை) அவர்கள் தந்திரமாக தன் தம்பி பின்யாமீனை தன்னுடன் தங்க வைத்துக்கொண்டார்கள். பிறகு ஒரு நேரம் வந்தது. மிகுந்த சிரமும், வறுமையும் ஏற்பட்டு துன்புற்றார்கள். மீண்டும் எகிப்து கவர்னிடம் தானியம் பெற்று வருவோம் என்று மறுபடியும் வந்தார்கள்.

முழு சம்பவத்தின் சாராம்சத்தை இதோ சற்று கவனமாகக் கேளுங்கள். ஹஜ்ரத் யூசுஃப் (அலை) சிம்மாசனத்தில் அமர்ந்துள்ளார்கள். சகோதரர்கள் அரசவைக்கு வந்தார்கள். கெஞ்சும் குரலில். "எகிப்து கவர்னர் அவர்களே! எங்களுக்கும் எங்கள் குடும்பத்திற்கும் வறுமை பிடித்து வாட்டுகின்றது. நாம் சிறிதளவுதான் பணம் கொண்டு வந்துள்ளோம். எங்களுக்கு நிறைவாக தானியம் கொடுங்கள்! எங்கள் மீது அதிகபட்ச தயவு காட்டுங்கள்!"என பிச்சைக்காரர்கள் தருமம் கேட்பது போல் கேட்டார்கள். யூசுஃப் (அலை) பார்த்தார்கள். நானும் நபியின் மகன். இவர்களும் நபியின் மக்கள். இன்று இவர்களின் நிலையோ கைகட்டி நின்று பிச்சை கேட்கிறார்களே என்று மனம் உருகிவிட்டார்கள். பிறகு சகோதரர்களிடம்,"நீங்கள் யூசுஃபுடன் எப்படி நடந்து கொண்டீர்கள்?"

என்று கேட்டார்கள். இதைக் கேட்டதுமே அவர்கள் வியப்புற்று "நீங்கள் யூசுஃப்தானா?" என்று கேட்டார்கள். "ஆம்! நான் யூசுஃப்தான். இதோ இவர் என் தம்பி பின்யாமீன். அல்லாஹ் எங்கள் மீது பேரருள் புரிந்தான். இறையச்சமும் பொறுமையும் கொள்ளும் யாருக்கும் அல்லாஹ் தன் கூலியை குறைப்பதில்லை. வீணாக்குவதில்லை" என்று கூறினார்கள்.

**முடிவுரை :**

ஒவ்வொரு காலத்திலும் ஒவ்வொரு கட்டத்திலும் நபி யூசுஃப் (அலை) அவர்களின் உடன்பிறப்புக்களின் வழியில் இச்சையை பூர்த்தி செய்துகொள்! பின்னால் நல்லவனாகிவிடலாம் என்ற பாதையை தேர்ந்தெடுப்பவர்களை அல்லாஹ் பூமியில் ஏழையாக்கி நிற்கவைப்பான். நபி யூசுஃப் (அலை) அவர்களைப் போன்று இறையச்சம். கற்புடைய வாழ்க்கையை மேற்கொள்பவர்களுக்கு அல்லாஹ் கண்ணியத்தின் கிரீடம் அணிவித்து சிம்மாசனத்தில் அமரவைப்பான்.எனவே,இளைஞர்களே! வாழ்க்கையின் இருவித பாதைகள் உள்ளன. நீங்கள் இந்த வயதில் நட்புகளைத் தேட ஆரம்பித்தால் நபி யூசுஃப் (அலை) அவர்களின் உடன்பிறப்புக்களின் வழியில் செல்ல நேரிட்டால், பிறகு ஒருநேரம் வரும். நீங்கள் உலகில் இவ்வாறே தடுமாறியும் துன்புற்றும் இழிவுகேவலமுற்றும் அலைவீர்கள்! ஆனால் இப்போதே நீங்கள் நல்லவர்களாகிவிட்டால் இறையச்ச முள்ள வாழ்வை தேர்ந்தெடுத்தால், தனது இளமையை அல்லாஹ்வின் கட்டளைக்கேற்ப கழித்தால் பிறகு அல்லாஹ் உங்களுக்கு எத்தகைய அருள்களைப பொழிவான் எனில், அல்லாஹ் உங்களுக்கு ஈருலகிலும் கண்ணியத்தைக் கொடுப்பான். அல்லாஹ் நமக்கு நற்செயல் பேணுதல் கொண்ட வாழ்வை அளிப்பானாக!

**'காக்கைக்கு உயரப் பறக்கும் ஆற்றலும் தகுதியும் பிறக்கவில்லை...**
**காக்கையின் நட்புறவால் ராஜாளிக் குஞ்சுகளும் கெட்டுப்போய்விட்டன**
**காலத்தின் கண்களிலே வெட்கமும் நாணமும் பாக்கியில்லை....தம்பி!**
**உன் இளமை களங்கமடையாதிருக்க இறை அருள் புரிய வேண்டுமே!"**

வல்ல அல்லாஹ்வே! இந்த இளைஞர்களின் இளமையை களங்கமடையாமல் காப்பாற்றுவாயாக! இவர்களை இவர்களின் பெற்றோர்களுக்கு கண்குளிர்ச்சியாக ஆக்கிவைப்பாயாக! இவர்களை சமுதாயத்தில் நல்லவர்களாக ஆக்கிவைப்பாயாக! ஈருலகத்தின் கண்ணியத்தை வழங்கிடுவாயாக!

## "சாத்தானியச் சதிகள்"...

ஒரு வாசனைத் திரவத்தைக் கண்டுபிடிக்க வேண்டும். அதை ஆண் பூசிக் கொண்டபின் அதை ஒரு பெண் நுகர்ந்தால் பெண்ணுக்கு காம உணர்வு பிறக்க வேண்டும் என்று யோசித்தனர். அதன்படி ஆய்வு செய்து ஒரு வாசனை திரவத்தைக் கண்டுபிடித்தனர். உதாரணமாக, "கோரம்" இதை மாணவர்கள் தடவிக் கொள்கிறார்கள். இத்தகைய நறுமணத்தின் பிரத்தியேக தன்மை என்ன என்றால், அதை யார் நுகர்ந்தாலும் நுகர்பவருக்கு அது காம உணர்வை விழிப்படையச் செய்கிறது.

அந்த வாசனைத் திரவத்தை எந்த ஆண் உபயோகித்தாலும் அவனுடன் பெண்கள் மிக சீக்கிரமாக அன்புப் பேச்சுக்கள் பேச ஆயத்தமாகிவிடுகிறார்கள் என்ற அனுபவத்தைக் கண்டார்கள். பிறகு அவர்கள் இன்னொரு நறுமணத்தைக் கண்டுபிடித்தார்கள். அதை ஒரு பெண் பூசிக்கொண்டு எங்காவது நடந்து சென்றால் அதை நுகரும் ஆணின் மீதும் இதே உணர்ச்சிகள் வந்து விடுவதைக் கண்டார்கள். இந்த வெற்றிக்குப் பின் ஆண் உபயோகித்தால் பெண் தாக்கமடையும், பெண் உபயோகித்தால் ஆண் வயப்படும்படியான வாசனைத் திரவங்களைத் தயார் செய்துவிட்டார்கள். இதன் கருத்து என்னவென்றால் மனித மூளை வரை நாம் சென்றடைய முடியும் என்பதைக் காட்டுகிறார்கள். அடுத்து அவர்கள் ஒரு வகை வாசனைத்திரவம் கண்டுபிடித்தார்கள். ஒருவர் அதை நுகர்ந்துவிட்டால், உலகையே விலைக்கு வாங்கிவிட வேண்டும் எனற மனத்துடிப்பு அவருக்கு எற்படும். எனவே விஞ்ஞானிகள் இதை ஒரு தெருவளவு விரிந்திருக்கும் பெரும் டிபார்ட்மெண்டல் ஸ்டோர்களில் பரீட்சித்துப் பார்த்தார்கள். அதன் ஏர்கண்டிஷன் காற்றுடன் அந்த வாசனைத் திரவத்தை ஸ்ப்ரே செய்துவிட்டால், ஐந்து டாலருக்கு சிற்றுண்டிக்கான பொருள் வாங்க நினைத்து வந்தவன் இந்த வாசனையை நுகர்ந்ததும் ஐம்பது டாலருக்கு பொருட்களை வாங்கிச் சென்றான்.

வெளியீடு :

முஸ்லிம் சமூக சீர்திருத்தப் பேரவை - பள்ளப்பட்டி.